உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆசகாரிய விளக்க

# மறுப்புக்கு மறுப்பு.



இது

தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபை
உபாக்கிராசனாதிபதியும் சைவப்பிரசாரகருமாகிய

## பொ. மு. முத்தையபிள்ளை

எழுதி

மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

1912

உ

# அபிப்பிராயங்கள்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதி பிரம்மஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கள் எழுதியது.

ஸ்ரீமான் பொ. முத்தையபிள்ளையவர்கட்கு

ஐய!

தசகாரிய விளக்கமென்னும் நாமதேயத்துடன் தாங்களன்புற்றியற்றிய நூலையும் அதன்கண் மொழியப்பட்ட சிற்சில கொள்கைகள் சைவசித்தாந்த தாற்பரியத்துக்குப் பொருந்தாவென வற்புறுத்தி தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபைக்காரியதரிசி ஸ்ரீதெ. ச. சு. சுப்பிரமணியபிள்ளையவர்களியற்றிய மறுப்பென்னும் நூலையும் அம்மறுப்பி லமைந்த வாதங்களைப் பூர்வபட்சப்படுத்தி அம்மறுப்புக்கு மறுப்பாகத் தாங்களினிதியற்றிப் பிரசுரித்த நூலையும் படித்து ஆராயும் சமயம் எனக்குக் கிடைத்ததைப் பற்றி மகிழ்ச்சியடைந்தேன்.

அம்மறுப்புக்களில் வாதிக்கப்பட்டனவாக யானறிந்த விஷயங்களாவன.

(1) எல்லா ஆன்மாக்களும் ஒருசேர முத்தி யடைதல் இயலுமா?

(2) ஆன்மாக்கள் அளவிறந்தன வென்பதற்குப் பொருளென்ன?

(3) பெத்தான்மாக்க ளெல்லாம் ஒருசேர முத்தி பெறின், பதி, சொரூப சிவமாய் விளங்கி நிற்கினும் பாச

மும் பசுவும் இல்லையாய் முடியுமா? அவ்வாறு முடியுமா யின் அது சைவசித்தாந்தக் கொள்கைக்குப் பொருந்துமா?

(4) "நீக்க நீங்கி விமலனிலடங்கும்" என்னும் வாக்கியத்திற்கு விமலனிடத்து ஆன்மா அடங்குமென்பது பொருளா அல்லது மலம் அடங்குமென்பது பொருளா?

(5) "காயமோ மாயையன்று காண்பது சத்தியதன் னால்" என்னும் வாக்கியத்தில் "மாயை" என்னும் பதத்திற் கும் "சக்தி" என்னும் பதத்திற்கும் பொருள்கள் யாவை?

மேற்கண்ட அம்சங்களுக்கு விடையளிக்க நான் முயற் சிப்பது குற்றமாயின் அக்குற்றத்தைச் சைவசித்தாந்த நூல் களின் நுட்ப ஆராய்ச்சியுள்ள பண்டிதர்கள் பொறுப்பார்க ளாக.

1. ஒரு சமயத்தில் எல்லா ஆன்மாக்களும் முத்தி யடைந்து பிரபஞ்சமே இல்லாதொழியின் ஈசுவரனுடைய அருளுக்கு விஷயமாவது பயனாவது என்ன? எல்லா ஆன் மாக்களும் முத்தியடைந்த பிறகு அவர்களுக்கு மறுபிறப்புக் கூறின் முத்தியைத் திரும்புதலற்ற நிலையென்று வற்புறுத்தும் சுருதி பொருளற்றதாக முடியுமே. ஈசுவரனுடைய பஞ்ச கிருத்தியங்கள் அநாதியென்றும், நித்தியமென்றும், கூறு கின்ற விதியை முக்கியப்பொருளிற் கொள்ளாமல் கௌண மாகவாவது அர்த்தவாதமாகவாவது கொள்ளலாமா? அப்ப

டிக் கௌணமாகவாவது அர்த்தவாதமாகவாவது பிரதான மான சைவக்கிரந்தங்களில் பொருள் கொள்ளப்பட்டிருக் கின்றனதா? சைவ சித்தாந்தத்தில் இப்பொழுது பத்தர் களா யிருக்கும் ஆன்மாக்க ளெல்லாம் முத்தியடைந்த பிறகு ஈசுவரனுக்கு பஞ்சகிருத்தியமே கிடையாதென்றும், பிர பஞ்சமே அற்றுப்போகுமென்றும் சொல்லப்பட்டிருந்தால் அப்படிச் சொல்வதை ஆராய்ந்து தீர்மானிப்பதற்கு நமது யுக்திவாதம் சாதனமா யிருக்குமே தவிர, சைவசித்தாந்தத் திற் சொல்லப்படாத கொள்கையை நம்முடைய யுக்திவா தத்தினல் கற்பிக்கலாமா? நமது வேதங்களை ஆதாரமாகக் கொண்டு நடைபெறும் எல்லாமதங்களிலும் ஈசுவர கிருத்தி யம் அநாதியென்றும் அநந்தமென்றும் அங்கிகரிக்கப்பட் டுள்ளதால் அவ்வேதங்களின் சிகைகளில் ஒன்ருகிய சைவ சித்தாந்தத்தின் கொள்கை மட்டும் வேறுவிதமாக இருக்கு மோ என்கிற ஐயம் எளிதில் தீரக்கூடியதன்று. வியாச பகவானுடைய சூத்திரங்களுக்கு பாஷ்யம் அருளி யிருக் கும் ஸ்ரீமாந் நீலகண்ட சிவாசாரியர் அவர்கள் மொழிந் திருக்கும் தாற்பரியம் சைவசித்தாந்தத்துக்கு ஆதாரம் அல்லவா? அவர்கள் ஆன்மாக்களின் சொரூபத்தையும் அவர்களுடையமலம் ஒழிந்து முக்தர்களாகும் முறையையும் அம்முறை பயன் பெறும் வண்ணம் பரமேசுவரனுடைய அருளைத் தேடியடையும் வழியையும் புகன்று ஆன்மாக்கள்

முத்தி தசையில் சிவ வடிவமாய்ப் பேரானந்தத்தில் மூழ்கி நிற்கும் திரும்புதலற்ற பதவியையும் புண்ணியங்களின் பயன்களைப்புசிப்பதற்கு ஆன்மாக்கள் சுவர்க்கலோகத்தில் அமர்ந்து புண்ணிய பலன் புசித்ததன்மேல் பூவுலகத்திற்குத்திரும்பி மறுபிறப் பெய்தும் நிலையையும் புண்ணியங் குறைந்து பாவத்தையே அதிகமாகப்புரிந்த ஆன்மாக்கள் அதோ லோகமென்னும் நரகலோகத்தில் வசித்து, பின்னர் மறுபிறப்பெய்தும் வகையையும் பெத்தஆன்மாக்களும் பிரபஞ்சமும் கற்பாந்தரங்களில் பரமேசுவரனால் தன்னுக்குள் உபசம்ஹாரம் செய்யபட்டு அவனிடத்தில் லயமாகி ஒடுங்கி நிற்கும் தன்மையையும் பிரளயம் முடிந்து சிருஷ்டி தொடங்குங்கால் ஆன்மாக்களும் பிரபஞ்சமும் வெளியில் வந்து தூங்கி விழிக்கும் பிராணிகள்போல ஆன்மாக்கள் தாம்முன் இயற்றி முடியாத கர்மங்களைத்தொடர்ந்து இயற்றி முடிக்கும் நுட்பத்தையும் விவரித்துச்சொல்லியிருக்கின்றார்களே. அம்முறையே அவர்களுடைய பாஷ்யத்தை நன்குற விரித்து, சிவார்க்கமணிதீபிகை முதலிய கிரந்தங்களை வரைந்திருக்கும் ஸ்ரீமாந் அப்பய தீக்ஷிதரவர்களும் மொழிந்திருக்கின்றார்களே. அவர்களுடைய கருத்துகளுக்கிணங்க சிவஞானபோதம் முதலிய திராவிட கிரந்தங்களை இயற்றியிருக்கும் ஸ்ரீ மெய்கண்ட தேவர் முதலிய புனிதர்களுடைய நூல்களும் விளக்கி நிற்கின்றனவே. அந்நூல்களெல்லாம் சாங்

கோபாங்கமாக ஆராயப்படின் சிருஷ்டியும் லயமும் முடிவின்றி ஒன்றின் பின் ஒன்றாக நிகழ்ந்து வருமென்றே தெளிவாக வெளியாகின்றதேதவிர காலாந்தரத்தில் சிருஷ்டி என்பதும் லயமென்பதுமில்லாமல் ப்ரபஞ்சத்தின் அபாவம் நேருமென்று ஊகிப்பதற்கே யிடமில்லையே; அவ்வாறு பிரபஞ்சம் சூன்யமாகி பஞ்சகிருத்தியமே யில்லாமல் பரமேசுவரன் தன்வடிவாய் தன்னந்தனியாகவே யிருப்பன் என்னுங் கொள்கை உண்மையாயின் அக்கொள்கைமட்டும் அவர்களாற் சொல்லப்படாம லிருக்குமா? அக்கொள்கை முக்கியமான தன்றென்றும் அதனல் அது சொல்லப்படவில்லை என்றும் நாம் கருதுவதற்கு இடமுண்டா. அது முக்கியமான தன்றாயின் அதைக் காட்டிலும் முக்கியமில்லாத பலவிஷயங்களும் அவர்கள் எடுத்து விஸ்தாரமாக உரைப்பதற்கு நியாயமென்ன?. இந்த நியாயங்களை எல்லாம் நன்கு ஆராயின் சர்வான்மாக்களும் ஒருசேர முக்தியடைதல் இயலாதென்பதே உண்மையான கொள்கையென்று அங்கீகரிப்பது பொருந்தும்.

2. அளவிறந்த என்ற சொல்லிற்கு சாமான்யமாக பூர்ணமென்று பொருள் கொள்வது உசிதம். பூர்ணமென்ற பதத்திற்கு "ஸூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஸிஷ்யதே" என்கிற சுருதி வசனப்படி பூர்ணமானதி லிருந்து எவ்வளவு எடுத்தாலும் அப் பூர்ணம் குறையாது என்

பது பொருளாகும். ஆகவே மொத்த ஆன்மாக்கள் பிராகிருத சங்கைக்குள் அடங்கிய லக்ஷம் அல்லது பலகோடி என்னும் அளவிற்குள்ளடங்கினவென்று நாம் வைத்துக் கொண்டால் பத்தில் மூன்றைக் குறைத்தால் மீதத்தொகை ஏழாவதுபோல சிற்சில ஆன்மாக்கள் முத்தி யடையவும் மீத ஆன்மாக்கள் மொத்தத் தொகையினின்றும் குறைந்து வரும். அப்படியாயின் ஆன்மாக்கள் வெகுவானவைகளென்றும் அளவுள்ளனவென்றும் வசனம் ஏற்படுமே யல்லாது அளவிறந்தன வென்னும் பிரமாண வசனம் ஏற்படாது. வியக்தமாக இரண்டு வசனங்கள் பரஸ்பரபேதமுள்ள பொருளுள்ளனவாகஅமைந்துஅவைகளில் ஒரு வசனமட்டும்வெகுபிரமாணங்களால் ஆதரிக்கப்பட்டுமற்றொன்று அஃமுறை ஆதரிக்கப்படாதிருப்பின்வெகுபிரமாணங்களால்ஆதரிக்கப்பட்ட வசனத்தை முக்கியமாகவும் மற்றொன்றைக்கௌணமாகவும் பொருள்கொண்டு அவ்விரண்டு வசனங்களையும் ஒருமுகமாகப்பொருள்படுத்துவது சாஸ்திரங்களின் சம்பிரதாயம். இங்கு அளவிறந்தனவென்னும் பதத்தை அளவுள்ளனவென்று பொருள்படுத்துவதற்குப்பிரமாணமான வேறு என்ன முக்கிய வசனம் இருக்கின்றது? மேலும் பதப்பொருளை உள்ளவாறு ஆராய்ந்து தாற்பரியம் கொள்ளவேண்டியது யுக்தமாயிருக்க, பதப்பொருளுக்கு வேறு விதமாகவாவது அதற்கு எதிரிடையாகவாவது தாற்பரியங்கொள்வது

உசிதமாகுமா? ஒரு இடத்தில் ஒருபொழுது தேவதத்தன் வந்தானென்று ஒரு வசனமும் அப்பொழுதே அந்த இடத்தில் நாகதத்தன் வந்தான் என்று ஒரு வசனமும் இருந்து முந்திய வசனமானது வெகு பிரமாணங்களால் ஆதரிக்கப்படின் பிந்திய வசனத்திலடங்கிய நாகதத்தன் என்னும் வசனத்தை நாக=தேவ, என்று பொருள்படுத்தி இரண்டு வசனங்களும் தேவதத்தன்வந்ததையே குறிக்கின்றனவென்று பொருள்படுத்துவது ஓர் முறையாகும். "அவன் ஓர் சிங்கம்" என்று வசனமிருக்கின் அவனை நரனாகக் கொள்வது மட்டும் உசிதமாயிருப்பதால் அவனிடத்தில் சிங்கத்துக்குள்ள வீரியம் முதலிய குணங்கள் அமைந்திருப்பதைக்கண்டு அவனை "சிங்கம்போன்ற நரன்" என்று அவ் வசனத்துக்குப் பொருள்படுத்துவது கௌணமாகும். இங்கு அளவிறந்தன என்னும் வசனத்துக்கு அளவுள்ளன என்று பொருள்கொள்வது சாமான்யமான பதப்பொருள் இலக்கணத்திற்கும் விரோதம். அது இலக்ஷணையுமல்ல. கௌணம்என்று சொல்ல நியாயமில்லை. ஆகையால் நம்மறிவால் ஆராயமுடியாத ஈசுவரனுடைய விசித்திர லீலையினால் அமைந்துள்ள ஆன்மாக்கள் "அளவிறந்தன" என்னும் வாக்கியத்திற்கும் அம்முறையே பொருள் கூறவேண்டும். அவயவங்களையுடைய அநித்யப் பொருள்தான் அஃதின் அவயவங்கள் ஒவ்வொன்றுய்க் குறைவதும் எல்லா அவயவங்களும் ஒழியும்

போது அப்பொருளே இல்லாது அபாவமாக அமைவதும் பொருந்தும். அப்படி அவயவங்களுள்ள பொருள்தான் அளவுள்ளதாகும். சமஷ்டியாக ஆன்மாக்களின் தொகைக்கு அவயவமில்லாத காரணப்பற்றித்தான் அத்தொகை "அளவிறந்த" வென்று சாஸ்திரம் வற்புறுத்துகின்றது விஷயம்பற்றி நிற்கும் நமது சிற்றறிவின் அனுபவத்திலுள்ள எப்பொருளின் தன்மையாவது "அளவிறந்த" அல்லது "பூர்ண"மென்னும் மகத்துவமுள்ள தன்மைக்கு உதாரணமாகாது.

3. எல்லா ஆன்மாக்களும் முக்தியடைந்து பிரபஞ்ச கிருத்தியமே சூன்யமாகிவிடில் பாசமும் பசுவும் இல்லாமலே ஒழிந்துவிடுமே? பாசமென்றால் பசுவைக்கட்டும் கயிறு. பசு வென்றால் பாசத்தால் கட்டப்படுவது. பிரபஞ்சமில்லாதொழியின், கட்டப்படும் பொருளும் கட்டும் கருவியும் மிஞ்சியிருக்குமா? அவ்விரண்டு மில்லாதொழியின் பசு பாசம் உள்பட மூன்று தத்துவங்களும் நித்யமானவையென்று உறுதி கூறும் சைவ சித்தாந்த வாக்கியம் பொருளற்றதாக முடியுமே. அம்முடிவை நன்குணர்ந்த சைவர்கள் அங்கீகரிப்பார்களா?

4. "விமலன்" என்னும் சொல் "அபஹதபாபமத்வம்" என்று பொருள்படுகிற மலமின்மையையுடைய ஈசுவரனைக் குறிக்கின்றது. அவனை மனத்தால் உன்னுவதினு

லேயே மலமனைத்தும் நீங்கி ஒழியுமென்று சாஸ்திரங்கள் கூறும்பொழுது மலமானது அவனுக்குச் சமீபத்தில் வரவும் இயலாது. அப்படியாயின் மலமானது அவனை அடைந்து அவனிடத்தில் அடங்கும் என்று எப்படிச்சொல்லத் துணியலாம்? பெத்த ஆன்மாக்களெல்லாம் எவனுடைய அருளால் மலமற்றவர்களாகின்றார்களோ அவனிடத்தில் மலங்களெல்லாம் போய் அடங்குமென்னும் கருத்துக் குற்றமுள்ளதல்லவா?

5. சர்வாந்தர்யாமியாகிய பரமேஸ்வரன் அடியார்கட்கு அருள் புரியுமாறு தன்னுடைய திவ்ய சக்தியாகிய சுத்த தத்துவத்தைச் சாதனமாகக்கொண்டு ரூபசாந்நித்யத்தை எடுத்துக்கொள்ளுகிறான். அவன் சரீரமானது மற்ற சரீரங்களைப் போல மாயையன்று. அஃதாவது இருந்து அழியும் பான்மையுடையதன்று. ஆனால் தோன்றி மறையும் பான்மையுடையது. சக்தி விகாசத்தை அடையும்போது உருவமாகத் தோன்றுவதும், உருவம் திரோதானத்தை அடையும்போது சக்தியாகக் குறுகிவிடுவதும் அச்சரீரத்தின் பான்மையென்று பொருள் கொள்ளவேண்டுமெனத் தோன்றுகிறது.

தசகாரிய விளக்கத்தில் தாங்கள் வெளியிட்டிருக்கும் அபிப்பிராயம் மிக்க பொருத்தமுள்ளதென்றே என் சிற்றறிவுக்குப் புலப்படுகின்றது. இங்ஙனம்

பி. எஸ். சுப்பிரமணிய ஐயர்.

மதுரை வித்தியாபாநுப் பத்திராதிபர் ஸ்ரீமாந் மு ரா. கந்த சாமிக் கவிராயர் அவர்கள் "வித்தியாபாநு" தொகுதி4 பகுதி5 ல் எழுதியது.

# ஆன்மாக்களும் முத்தியும்.

---

தூத்துக்குடி ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்களெழுதிய 'தசகாரிய விளக்க"த்திற் கூறப்பட்ட சில விஷயங்களின் மறுப்பாக ஸ்ரீ தெ. ச. சுப்பிரமணியபிள்ளையவர்கள் வெளியிட்ட 'சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தே விடும்,' என்ற புத்தகமும், அதற்கு மறுப்பாக ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்களெழுதிய "மறுப்புக்கு மறுப்பு" என்ற புத்தகமும் நமது பார்வைக்கு வந்தன. இவற்றை எழுதிய இருவரும் இப்புத்தகங்களை எமக்கனுப்பி எம் அபிப்பிராயத்தை வெளியிடுமாறு இலிகித மனுப்பியுள்ளார்கள். முன்னரே தசகாரிய விளக்கத்தையும் பார்த்துள்ளேம். எமது நண்பர்களாகிய இவ்விருவரும் விரும்பியவண்ணம் இப்புத்தகங்களை ஆராய்ந்தமட்டில் யாங்கொண்ட அபிப்பிராயத்தை நமது பாநு வாயிலாகவே வெளியிடுகின்றும் நண்பர் இருவரும் கண்டுகொள்வார்களாக.

(1) எல்லா ஆன்மாக்களும் ஒருகாலத்தில் முத்தியையடையும். அதாவது பெத்தான்மாக்களேயில்லாதொழியும்.

(2) மலம் இறுதியில் இறைவனிடத்தேயடங்கும்.

(3) தடத்தசிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனி யில்லை.

என்னுமிவை தெ. ச. சுப்பிரமணியபிள்ளை யவர்கள் கருத்தாம். இவற்றின் மறுதலையாக ஆன்மாக்கள் எத்தனை காலம் முத்தியை யடைந்துகொண்டே வரினும் பெத்தான் மாக்கள் இல்லாதொழியா. மலம் இறைவனிடத்தில் அடங் காது. தடத்த சிவத்துக்கு சுத்தமாயையிற் றிருமேனி யுண்டு. என்னு மிவை பொ. முத்தயபிள்ளையவர்கள் கருத்தாம்.

இவைகளைப்பற்றி எமது அபிப்பிராயத்தைக் கூறு தும்:—மதசம்பந்தமான உண்மை விசாரத்திற் றலைப்பட்டு யாதானுமொன்றைப்பற்றி ஒருவித முடிவுக்கு வரவேண்டு மாயின் அந்த மதத்துக்குரிய சாத்திரங்களையும் பூர்வா சிரியர் கருத்துக்களையும் தழுவி அவற்றுக்கு மாறுபடா வண்ணம் தத்தம் மதிநுட்பத்தைக்கொண்டு சித்தாந்தஞ் செய்தல்தான் முறையாகும். அற்றன்றி சாத்திரங் களையும் பூர்வாசிரியர் கருத்துக்களையும் புறம்பாக்கி நெகிழ விட்டுத் தங்கள் தங்கள் மதிநுட்பத்தையே சால மதித்து நவீன கற்பிதவாதத்திற் றலைப்படல் பயனில் செயலே யல்லது பிறிதின்று. சைவ சித்தாந்தப் பற்றுடைய பிள்ளை

யவர்களிருவரும் சைவசித்தாந்த சாத்திரங்களையும் பண்டை ஆசிரியர் கருத்துக்களையும் தழுவி அவற்றுக்கு முரண்படா வண்ணம் தத்தம் மதிநுட்பந் தோன்ற வாதித்துச் சாதித்தலே பொருத்தமுடையதும் சித்தாந்தஞ் செய்யப் பெறுவதுமாகும். இவ்வரம்பிற்கு இருவரும் கட்டுப்படும் கடப்பாடுடையரே யாவர்.

சாத்திரங்களும் ஆசிரியர்களும் ஆன்மாக்கள் அநாதி யென்றும், அளவில்லனவென்றுங் கூறியுள்ளார்கள். ஆதி யில்லாதவற்றிற்கு அந்தங் கூறல் பொருந்தாது. பெத்தான் மாக்களெல்லாம் காலாந்தரத்தில் ஒருசேர முத்தியடைந்து இல்லாதொழியு மென்றால் அநாதியென்றற் கிழுக்காகும். அளவில்லனவென்று எல்லாருங் கூறியிருப்பவும் கட்டுத் தொகையென்ற ஓரளவுக் குட்படுத்தி முத்தி சேரச்சேர இருப்புத்திட்டம் குறையுமென்றலும் பொருந்தாது. கட்டுத் தொகைக்குட்படுத்தமுடியாதென்பது தோன்ற அளவில் லன என்று வரையறுத்து யாவரும் கூறியிருப்பவும், நாம் கட்டுத்தொகை கற்பித்தல் முரணும். காலம் என்பதுஎன்று முள்ளதாக அறிகிறோம். இறந்தகாலம் கழிந்துகொண்டே வருகிறது. இங்ஙனம் கழிந்துகொண்டே வருதல்பற்றி வரவரக்கழிந்து கழிந்து காலமென்பதே யில்லாமற்போகு மென்பாருண்டோ? அல்லது காலம் புதிதாகத் தோன்று மென்னலாமோ? புதிதாகத் தோன்றாமலும் கழிந்து வரு

தலால் ஒழியாமலும் காலம் என்பது இருத்தல்போலவே ஆன்மாக்களும் அநாதியாயும், முத்தியெய்தலால் அறவே யொழியாமலும் என்றும் குறைவின்றி யிருக்குமென்பதே ஆன்றோர் கொள்கையாம். இக்கருத்தையே திருவருட் பயன் நூலாசிரியரும்,

"பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை"

எனக்கற்பித்தருள்வாராயினர். அன்றியும், பெத்தான்மாக் களே யில்லாதொழியின் பிரபஞ்சமும் பஞ்சகிருத்தியமு மில்லையாம். இங்ஙனம் ஒன்றுமற்ற சூன்ய நிலையைக் கற்பிதம் செய்தல் சாஸ்திர சம்மதமுமில்லை. பூர்வாசிரியர் கருத்துமில்லை. யுக்திக்கும் பொருத்தமில்லை. ஆகவே ஆன்மாக்கள் அநாதியென்றும் அளவில்லனவென்றும் ஆன் ரோர் கருத்துப்படி யாமுங் கோடலே மரபாகும்.

இனி "மலம் இறுதியில் இறைவனிலடங்குமா" என் பது:—இறைவனைப்பற்றிக் கூறுமிடமெல்லாம் நிமலன், அமலன், விமலன் என்பனவாதியவாக மலரகிதன் என்றே கூறக்காண்கின்றோம்..............."நீக்க நீங்கி விமலனிடங் கும்" என்ற விடத்து நீக்க—இறைவன் நீக்க. நீங்கி- மலத்தினின்று நீங்கி. விமலனிலடங்கும்- மலரகிதனாகிய இறைவனிடத்தே ஆன்மா அடங்கும். என்பதே பொரு

ளாம். அடங்குதல் வினைக்குக் கருத்தா ஆன்மாவென்பது முன்னை மூன்றடிகளாலும் பெறப்படும். அன்றியும் இவ்விடத்து விமலன் என்ற சொல்லைப் பெய்திருத்தலும் இக்கருத்தையே வலியுறுத்துவதாம். ஆகவே மலம் இறைவனிலடங்கும் என்றல் பொருந்தாது.

இனி "தடத்தசிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனியுண்டா"வென்பது:—தடத்த சிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனியுண்டென்பது பண்டை நூலாசிரியர் உரையாசிரியர் பலருக்கும் கருத்தாதலை ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்கள் நன்கு விளக்கியுள்ளார்கள். ஆனால், திருவானைக்காப் புராணத்தில் ஸ்ரீ கச்சியப்பசுவாமிகள்

"மாயை சுத்தமே யசுத்தமே யெனவிரு வகையாம்
ஆய மாயைக ளிரண்டுமெய் யறிவுரு வல்லால்
தோயு ருதநம் மருளினாற் றேழிலூர்ந் ருயிர்க்கு
மேய சீர்த்தநு வாதிக ளான்குமாய் விரியும்"

என்ற பாசுரத்தினால் சுத்தமாயை அசுத்தமாயையிரண்டிலும் உயிர்கட்கு தநுகரணாதிவருமெனக் கட்டளையிட்டருளியிருத்தலால் தடத்த சிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனியுண்டென்றல் முரணுமாலோ எனின், முரணாது. என்னை? சுத்தமாயை அசுத்தமாயை இரண்டிலும் உயிர்கட்குத் தநுகரணாதி வருமென்றற்குப்

பொருள் கொள்ளுங்கால் சுத்தமாயையில் விஞ்ஞானகலர், பிரளயாகலர் சரியை கிரியை யோகானுட்டானிகளாகிய உயிர்கட்குத் தநுகரணாதிகள் வருமெனவும் அசுத்தமாயையில் சகலர்க்குத்தநுகரணாதிகள் வருமெனவும் கொள்ள வேண்டும். இங்கே சிவபிரான் அம்பிகைக்கு உபதேசிக்கும் சந்தர்ப்பமாதலின் "அறிவுருவல்லாற் றோருருதநம்" என சொரூப சிவத்திற்கு அறிவே யுருவாதலை விளக்கி யருளியவாறுமாம். ஆகலின் இறைவனுக்கு அறிவேயுருவாதலன்றிச் சுத்தமாயையிற் றிருமேனி இல்லையெனக் கூறியதாகக்கொண்டு மலையற்க. தடத்தசிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனியுண்டெனக் கொள்க. சொரூப சிவம் தடத்த சிவம் இரண்டையும் ஒன்றெனக் கொண்டு முன் பின் முரண இடர்ப்பட லொழிக. இத்திருப் பாசுரத்துக்கு இதுதான் இக்குப் பொருளென்பது அடியில் வரும் திருப்பாசுரங்களால் அங்கை நெல்லிபோற்றோன்று மாறு காண்க. திருவானைக்காப் புராணமியற்றிய ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பெருமானே தாமியற்றிய தணிகைப் புராணத்தில் மாயையை விரித்துணர்த்து மிடத்து

'மாயை யிரண்டு திறனுகுஞ் சுத்த மசுத்த மெனமாதோ"

"மேதகு சிவமே சத்தியே நாதம்
விந்துவே சதாசிவ மகேச

# அபிப்பிராயங்கள்.

பேதமே யரனென் றிவர்க்கும்விஞ் ஞான
கலரொடு பிரளயா கலர்க்கும்

தீதறு சரியை கிரியையோ கத்திற்
செறிந்தவர் தமக்குமற் றனுக்கள்
ஓதுறு கரண புவனபோ கமுமைங்
கலையுமற் றுயிர்ப்பது சுத்தம்''

''மாலயன் வலாரி தேவர்கண் முதலா
மன்னிய சகலருக் கெல்லாம்
கோலநற் றனுக்க ளாதிய நான்கும்
கொடுப்பதா லசுத்தமா மாயை''

எனக் கட்டளை யிட்டருளியுள்ளார். இவ்விருபுராணமும் ஒருவர் திருவாக்கே யாதலின் முன்னது சூத்திரம் போலவும் பின்னது பாடியம் போலவும் உய்த்துணர்வார்க்கு எளிது புலனும். இதனுல் தடத்த சிவத்துக்குச் சுத்தமாயையிற் றிருமேனி யுண்டென்று பூர்வாசிரியர்கள் கருத்துக்கு மாறுபடாமல் கொள்ள வேண்டுமென்பதே பெறப்படுகின்றது.

எமது நண்பர்கள் வேண்டுகோளின்படி எமது அபிப்பிராயத்தை ஒருவாறு வெளியிட்டு முடித்தாம்.

இங்ஙனம்

மு. ரா. கந்தசாமிக் கவிராயர்.

வித்தியாபாநுப் பத்திரிகையில் வெளிவந்திருக்கும் மு. ரா. கந்தசாமிக்கவிராயர் அவர்கள் அபிப்பிராயமே தமது அபிப்பிராயமாகு மென்று ஒப்புக்கொள்வதாக எழுதியவர்கள்.

ஸ்ரீமாந் மு. ரா. அருணாசலக்கவிராயர் அவர்கள்,
தமிழ்வித்துவான், மதுரை.

,, நல்லகுற்றாலம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்பண்டிதர், சேதுபதிஹைஸ்கூல், மதுரை.

,, அ. சண்முகம்பிள்ளையவர்கள்,
தமிழ்வித்துவான், சோழவந்தான்.

,, சுந்தரேசுவரஅய்யரவர்கள்,
தமிழ்வித்துவான், மதுரை.

---

சாலியமங்கலம் தமிழ் வித்துவான்

## மு. சாம்பசிவநயினார் அவர்கள் எழுதியது.

தசகாரிய விளக்க நூலையும், அதனுட் சில விடயங்கட்கு மறுப்பாக வெழுந்த சர்வான்மாக்களு முத்தியைச் சார்ந்தேவிடுமென்ற நூலையும், அம் மறுப்பிற்குத் தசகாரிய நூலுடையார் தீட்டிய தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு என்னும் நூலையும் பார்வையிட்டேன். சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடு மென்ற அரியதோராராய்ச்சி நம்

முன்னோர்கள் எடுத்துக்கொண்டதாக யானிதுகாறுங்கண்டதில்லை. அன்றியும் எல்லா ஆன்மாக்களு முத்தியடையவே சிருட்டியேயின்றாய் சிருட்டி யனாதி என்பதும் இழுக்காம். சுத்தமாயையில் சிவபெருமானுக்குத் திருமேனி யுண்டென்பதற்கு மறுப்புக்கு மறுப்பில் எடுத்துக்காட்டிய பிரமாணங்கள் வலியுடைத்தாம். "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும், கேட்பான்புகில் அளவில்லை" என்றபடி இவ்விடயங்களும் அளவிடப்படாதனவேயாம்.

20—8—1912.
சாலியமங்கலம்.

இங்ஙனம்
மு. சாம்பசிவன்.

---

மேலைச்சிவபுரி சன்மார்க்கசபைக் காரிய நிர்வாகரும் தமிழ் சம்ஸ்கிருத பண்டிதருமாகிய மகிபாலன்பட்டி

ஸ்ரீமான். மு. கதிரேசச் செட்டியாரவர்கள் எழுதியது.

தூத்துக்குடி ஸ்ரீ சுப்பிரமணியபிள்ளையவர்களெழுதிய "சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்." என்னும் புத்தகமும், அதன் கண்டனமாக ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்களெழுதிய "மறுப்புக்கு மறுப்பு" என்னும் புத்தகமும் முறையே அவ்வந் நூலாசிரியர்கள் அனுப்பப்பெற்றுப் படித்துப் பார்த்தேன். அவற்றுள் முன்னையது,

ஆன்மாக்கள் ஒவ்வொன்ருக முக்தி யெய்தினும் ஒரு காலத்தில் எல்லாம் முக்தியைச் சார்ந்தே விடுமெனவும், அப்பொழுது ஆன்மாக்களைப் பந்தித்து நின்ற ஆணவமலம் இறைவனிடத் தடங்குமெனவும், பஞ்சகிருத்திய மொழியுமெனவும், அக்கிருத்தியங்களை நித்தியமென்றல் உபசாரமெனவும் இறைவனுக்குச் சுத்தமாயா சரீரமின்றெனவுங் கூறி யுக்திப்பிரமாண மொன்ருனே தன்கொள்கைகளை நிலைப்படுத்த முயல்கின்றது. பின்னையது, அக்கொள்கைகளை முறையாகச் சித்தாந்த நூற்பிரமாணத்தானும், யுக்திவகையானும் மறுத்து ஆன்மாக்க ளெண்ணிறந்தன வாதலானும், அநாதி நித்தியப் பொருளாதலானும், என்று மிங்ஙனமே ஐந்தொழிற் படுமெனவும், இறைவனுக்குச் சுத்தமாயா சரீர முண்டெனவுங் கூறித் தன் கொள்கைகளை நிலைப்படுத்துகின்றது.

முன்னையது, தன் கொள்கைக்குப் பிரமாணமாக மேற்கொண்ட தணிகைப் புராணச் செய்யுளினீற்றடியாயே "வியாத்தியை நீக்க நீங்கி விமலனி லடங்குமாற்ருல்" என்பதற்குக் காட்டியபொருள் பொருந்தாதென்பது அச்செய்யுளின் முன்னிரண் டடிகளிற் றடைமுகமாக் கூறிய வீடு சேராமைக்கும், பந்தத்தை விரவாமைக்குங் கர்த்தா உயிராதல்போல விமலனி லடங்குதலு முத்திப்பேறேயாதலின் அதற்குங் கர்த்தா உயிரே யாதல் வேண்டுமென்பது

ஞனுணரலாம். மலம் சடமாதலின் விமலன் அடக்கிக் கொள்வனென்றலே பொருத்தமாம். அங்ஙனமின்றி யடங்குமென்றதனன் இறைவன் கட்டறுத்துழித் தானே சென்றடங்கல் சிற்பொருளாகிய உயிர்க்கே கூடுமென்பது முணர்க. மாயை கன்மங்கள் சடமென்பது கருதியே "அவற்றை யெம்பிரானேன்று கொண்டருளும்" என்றார் சைவப்பெரியாரும்.

முப்பொருள்களும் அநாதி நித்தியமென்பது சைவசித்தாந்தம், அவற்றுட் பாசம் கட்டாதலின், ஒன்றனைப் பிணித்து நிற்றலே யதனியற்கையாதலானும், பிணிக்கப் படுதல் பசுவின் றன்மையாதலானும், கட்டறுத்தற்கு இறைவன் ஐந்தொழி லின்றியமையாது வேண்டப்படுதலானும், முப்பொருள் ஐந்தொழில்களெல்லாம் என்றும் இங்ஙனமே நிகழும் நித்தியங்களென்றலே சித்தாந்தத்துக்கு முரணாததாகும்.

ஈகையிலியைப் புகழ்ந்து கூறினும் கொடாதலின் இறைவனையே பாடுதல் வேண்டும் என்னும் பொருடோன்ற "கொடுக்கிலாதானைப் பாரியே யென்றுகூறினுங் கொடுப்பாரிலை" என்ற தமிழ் மறையில் பாரிவள்ளற் றன்மையிற் சிறந்தானென்பதும் பெறப்படுதல்போல "பெத்தான்மாவை நணுகி நிற்கும்" என்ற எதுவால் ஆணவமலத்துக்கு நிலைக்களம் பெத்தான்மாவென்பதும் பெறப்படும். ஸ்ரீமூர்த்தையு

பிள்ளை யவர்கள் தாமேற் கொண்ட கொள்கை யிரண்டிற்கும் போதியவளவு சித்தாந்த நூற்பிரமாணங் காட்டியிருக்கின்றார்கள். நான்முறையை யநுசரித்தே யுக்தியாற் பொருந்தல் வேண்டுமென்பதும், கேவல யுக்திவாதம் நீண்டு ஆராய்ந்தால் நிலைபெறாதென்பதும், ஒரு சமயநெறி நின்றார், அந்நெறிக்கு முரணான கொள்கைகளை நிலையுறுத்தற்கு யுக்தி தேடுதல் கூடாதென்பதும், நடுநிலையோடு உண்மையாராய்ச்சி செய்தல் வேண்டுமென்பதும் என் கருத்துக்களாம்.

ஸ்ரீ முத்தையபிள்ளையவர்கள் தம் வாதவிஷயத்தில் என் கருத்தைத் தெரிவிக்குமாறு விரும்பியபடி என் கருத்துறு பொருளைத் தெரித்துக் காட்டினேன்.

இங்ஙனம்,

மு. கதிரேசச்செட்டி.

---

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் மடாலயவித்துவான் ஸ்ரீமாந் சுப்பிரமணியபிள்ளையவர்கள் எழுதியது.

தூத்துக்குடி சைவசித்தாந்த சபைக் காரியதரிசி, தெ. ச. சு. சுப்பிரமணியபிள்ளை அவர்களால் தசகாரியவிளக்கத்திலுள்ள சில விஷயங்களை மறுத்து சர்வான்மாக்களும் முத்தியைச்சார்ந்தே விடுமென்னுந் தலைப் பெயரால் எழுதிய புத்தகமும், ஷையூர் ஷைசபை உபாக்கிராசனாதிபதி

யும் சைவப்பிரசாரகருமாகிய பொ. மு. முத்தையபிள்ளை அவர்கள் எழுதிய தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பும் பார்வையிட்டோம். சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தே விடுமென்றதற்குக் கூறிய மறுப்பு அங்கீகரிக்கற் பாலதே யாம்.

இங்ஙனம்

சுப்பிரமணியபிள்ளை.

---

சென்னை சித்தாந்தசரபம் அஷ்டாவதானம்

ஸ்ரீமாந் பூவை கல்யாணசுந்தர முதலியாரவர்கள் எழுதியது.

குசநுனியி னுங்கூர்ந்த மதிநிறைமுத் தையவேளை கூறக் கேண்மோ, தசகார்ய விளக்கமறுப் புக்குமறுப் பெனு நூலைச் சதுரிற் சூழ்ந்தேன், நிசங்கண்ட சாத்திரத்தின் முறையாக வேசொற்றாய் நிமல னன்பின், வசமுறுநல் லடியரெலா மதனுண்மை யினைநாடி மதிப்பர் மாதோ.

இங்ஙனம்

பூவை. கல்யாணசுந்தரமுதலியார்.

---

உறையூர் சைவசித்தாந்தசபைத் தனசாலாதிபரும், லாலாப்
பேட்டை சித்தாந்தஞானப் பிரகாச சபைத் தலைவரும்,
பூவாளூர் சைவ சித்தாந்த சங்கத்தின் உப அக்கிராசன
ஞாதிபதியு மாகிய உறையூர் ஸ்ரீமாந்

## தே. பெரியசாமிபிள்ளை அவர்கள் எழுதியது.

சைவ சித்தாந்த பரிபாலனச் செல்வராகிய அன்பார்ந்த ஐயா! திருவருளா லிவண் சுபமே. அவண் விஞுதற்பாலது மதுவே.

நிற்க, தங்களாற் சில வருடங்களுக்கு முன்னர் வெளியிடப் பெற்றுள்ள "தசகாரிய விளக்கம்" என்னும் பெயரிய நூலொன்றினைத் தங்களாற் கொடுக்கப்பெற்றுப் படித்துப் பார்த்துழிக்கழிபேருவகை கைவரப் பெற்றேம்.

சத்சாஸ்திர பிரமாணாதி சகிதமாக விளங்காநின்ற அந்நிராக்ஷேப கிரந்தத்தின்கட் கூறப்பெற்றுள்ள திட்ப நுட்பம் வாய்ந்த பல விடயங்களிற் சில விடயங்களுக்கு மறுப்பாக நம் நண்பர் ஸ்ரீமான் தெ. ச. சு. சுப்பிரமணியபிள்ளை அவர்களால் வெளியிடப்பெற்றுள்ள "சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்" என்னும் பெயரிய சிறுநூலொன்றினை ஆக்கியோரா லிதுகாலை கிடைக்கப் பெற்றுப்பார்த்துழி அது தாங்கொண்ட கொள்கையைத் தக்க பிரமாணவாயிலாக விளக்கு மாற்றலின்றி ஆன்றோர் வாக்கியங்கட்கு

விபரீதப் பொருள்கொண்டு சைவசித்தாந்த மெய்ந்நெறிக்கு ஒரு சிறிதும் ஒவ்வாத யுக்தி வாதத்தைக் கொண்டுள்ளதாகக் காணப்படுவதே யன்றி பிறிதில்லையென்பத தனைக் கண்ணுறுவார் யாவருக்கும் பிரத்தியக்ஷமா மென்ப தெமது துணிபு.

அன்றித் தங்கள்பாற் கொண்டுள்ள வன்மத்தின் காரணமாகவே அந்நூ லாக்கப்பெற்றிருப்பினுந் தாங்களியற்றிய "தசகாரிய விளக்க" த்திற்கு விவாத வாயிலாகவோர் புகழுறை செறித்ததாகக் கோடலுமாம். இனி இம் மறுப்பிற்குப் பிரதி மறுப்பாக "தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு" என்னுந் தலைப்பெயரிட்டுத் தாங்கள் வெளியிட்டுள்ள நியாய கண்டனத்தைச் சின்னாட்களுக்கு முன் கண்ணுற்றனம்.

அஃது பூர்வபக்ஷியார் கொண்ட கொள்கையைத் தக்கவரிய வுரிய பிரமாணவாயிலாக மூலதோஹானியாக்கிச் சைவசித்தாந்த சன்மார்க்கத்திற் கொரு சிறிது முரணுறுத தங்கள் கொள்கையை வச்சிர தம்பம்போல் நாட்டும் பெற்றியை யுடைத்ததாமென்ப தொருதலையே.

கேனோபநிடதாதி உபநிடதங்களினுஞ், சிவாகமாதி சித்தாந்த நூல்களினுங் கூறப்பெற்றுள்ள பிரமரகீட நியாயமானது, எமதாராய்ச்சியின் முன்னிற்கப் பெற்றிலதென்

றும், ஆகையாலதனை வொப்புக்கொள்ளத்தக்கதன்றெவும்ன
வாய்கூசாமற் கூறும் நண்பர் சிலரு மிதுகாலை உளராதலால்
சர்வான்மாக்களு முத்தியைச் சார்நதேவிடு மென்றும், அங்
ஙனஞ் சாராவேற் பஞ்சகிருத்தியத்தாற் பயனின்றெனவும்,
முத்தியைச் சார்ந்த ஆன்மாக்களினின்றும், விடுபட்ட ஆண
வமலத்திற் கிருப்பு சிவ பரஞ்சுடரேயா மென்றுஞ், சிவபெ
ருமானுக்குச் சுத்தமாயையிற் றிருமேனி கிடையாதென்
றும், பிறவுங் கூறவந்த நண்பரை வெறுப்பதாற் பயனென்.

இனி பூர்வபக்ஷியாரின் கொள்கைகளை மறுத்துத் தங்க
ளால் நாட்டப்பெற்றுள்ள கொள்கைகளே சுத்தாத்துவித
சைவசித்தாந்த சாத்திர சம்மதமாக வுள்ளனவென்பதூஉம்,
அவையே எமதபிப்பிராயமென்பதூஉம், எம்மா லாக்கப்பெ
ற்றுள்ள * பஞ்சகிருத்திய விளக்கமென்னும் நூலா னன்கு
வெள்ளிடை மலைபோற் றெள்ளிதி னுணரக்கிடக்கு மாத
லால் ஈண்டு விரித்திலம். சுபம்,, சுபம்,, சுபம்,,

பரீதாபி௵ ஆவணி௴ உ௰௨ (4—9—1912) உறையூர். } இங்ஙனந் தங்களன்புள்ள தே. பெரியசாமி

# அபிப்பிராயங்கள்.

திருக்கைலாயபரம்பரை தருமபுர ஆதீன தட்சண
ஏஜெண்டும் திருநெல்வேலி சைவசித்தாந்தசபைக்
காரியதரிசியுமாகிய ஸ்ரீமான்

## S. பால்வண்ணமுதலியார் அவர்கள் எழுதியது

தசகாரிய விளக்கத்தின் மறுப்பினையும் அம்மறுப்பிற்கு மறுப்பினையும் நன்கு படித்தனம். அவற்றுள் மறுப்பிற்கு மறுப்பு சித்தாந்த சாத்திரங்களின் கருத்தினை நன்கு கடைப் பிடித்து உண்மை யறிவுறுத்துவதாம்.

இங்ஙனம்
S. பால்வண்ணமுதலியார்.

30—8—1912. திருநெல்வேலி.

---

ஆலங்காடு வித்வான் ஸ்ரீமாந்.

## ரா. ம. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் எழுதியது.

எனதாப்தரும் தூத்துக்குடி சைவ ஸித்தாந்த ஸபை உபாக்கிராஸநாதி பதியு மாகிய ஸ்ரீ மான் முத்தைய பிள்ளை யவர்கள் உலகோபாரமாக இயற்றித் தந்த தஸ காரிய விளக்க மென்னும் நூலானது பண்டித பாமரர் களென்னும் இரு திறத்தினரும் எளிதில் வாசித்தறிவதற் கேற்ப தெள்ளிய தமிழ் நடையையும் ஆழ்ந்த கருத்தையும் பொருளுணக்கத்தையுந் தாங்கி நிற்றலோடு முந்நூலாதாரங்

கொண்டும் ஆன்றோர் வாக்கியங்களை மேற்கோளாகத் தாங்கி யும் கருத்து மலைப்பதற் கிடமாகிய ஆவசியக ஸந்தர்ப்பங் களில் சங்கையை எழுப்பி விடை கூறியும் தஸகாரியங்களை யும் கரதலா மலகம் போல விளக்கிக் காட்டக்கூடிய கீர்த்தி வாய்ந்தது. இவ்வரிய நூலானது என து கைக்கெட்டிய தினத்தி லிருந்து இந்நாள் பரியந்தம் மிகப் பெருமையுடன் பாராட்டி வருகின்றேன். அவ்வாறே ஏனைய வித்துவான்களும் கையாண் டுவருவதைக் கண்டுங் கேட்டு மிருக்கின்றேன். அன்றியும் அந்நூலில் ஏற்பட்டதாகிய சில சந்தேகங்களைப்பற்றி பிள்ளை யவர்களை நேரிற் சந்திக்கப் பெற்ற பல நற்சமயங்களில் வினவ அவர்கள் அதற்கேற்ற விடையை ஆன்றோர்வாக்கி யப்பிரமாணத்துடன் மெய்ப்பித்திருக்கின்றார்கள்.

இத்தகைய அருமைவாய்ந்த நூலிற்கூறிய சில விஷ யங்கள் பொருத்தமன்றென்பதனை விளக்கும் வண்ணம் ஷை ஸபைக் காரியதரிசியாராகிய ஸ்ரீமான் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தே விடும் என்ற தலைப்பெயர் கொண்டெழுதிய மறுப்பும், ஸ்ரீமான் முத்தையபிள்ளை அவர்கள் எழுதிய மறுப்பிற்கு மறுப்பும் ஆகிய இவ்விரண்டு புத்தகங்களும் என் கரத்திற் கெட்ட அவைகளை மிக ஊக்கத்துடன் ஆதி முதல் அந்த மீறாக ஆராய்ச்சி செய்யலாயினேன்.

அவ்வாறாராய்ந்த விடத்து ஸ்ரீமான் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் வாதிக்கும் வாதமானது சைவஸித்தாந்த சாஸ்திரக் கருத்திற்கு விரோதப்படுதலோடு சில செய்யுட்களின் கருத்தையும் வேறுபாடாகக் கொண்டிருக்கின்றார்கள். அவற்றை ஸ்ரீமான் முத்தையபிள்ளையவர்கள் எழுதிய மறுப்பிற்கு மறுப்பில் தெளிவாய் விளக்கியிருப்பதால் யாம் விளக்குவது உசிதமன்றென விடுத்தாம்.

ஸ்ரீமான் முத்தைய பிள்ளை அவர்களின் மறுப்பிற்கு மறுப்போவென்றால் அவ்வாறின்றி மறுப்புக்காரர் வாதமுகத்தாற் கேட்கும் ஒவ்வோர்வினவிற்கும் ஆன்றோர் வாக்கியபிரமாணத்துடன் விடைகூறி இருப்பதோடு ஸித்தாந்தக்கொள்கைக்குச் சிறிதும் முரணுறுமலிருக்கின்றதென்று என் சிற்றறிவிற்குத் தோற்றுவதால் சித்தாந்திகளனைவரும் ஸ்ரீமான் முத்தைய பிள்ளையவர்களின் கருத்தையே சித்தாந்தமாக நிலைநாட்டுவார்களென்று நம்புகின்றேன்.

சிதம்பரம்.

ஆலங்காடு.

---

சென்னை வித்துவான் ஸ்ரீமான்

## திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரவர்கள் எழுதியது.

முப்பொரு ளுண்மை யிப்புவி யோங்கச்
செய்யுஞ் சைவ சித்தாந்த சமாஜ
மாசி லுபந்நி யாசக மணியே
வித்தை முதிர்ந்த முத்தைய பிள்ளை
என்பா லுள்ள அன்பால் விடுத்த
சீரியர் சொல் "தசகாரிய விளக்க
மறுப்பின் மறுப்பை" விருப்போ டீந்தனர்
சச்சிதா னந்த சற்குண ரதனை
முற்று நோக்கினேன் சிற்றறி வதனால்
வேதமா நெறிக்குஞ் சைவ நற் றுறைக்கு
முரண்செய லின்மையும் அரண்செய லுண்மையும்
கண்டன னதனிற் கண்டனன்
பண்டையோர் கொள்கையைக் கொண்டநா வலனே.

26—9—12.

பேட்டை ஸ்ரீமான்

த. ஆறுமுக நயினார்பிள்ளை அவர்கள் எழுதியது

நேரிசை யாசிரியப்பா.

ஒப்புயர் வற்ற வொருபர சிவமுதல்
திப்பிய சொரூபமுந் திகழ்பொதுத் தடத்தமும்
மருவிய வநாதி மலமுத்த னன்றோ
அருண்மய ஞமவ னைந்தொழி லாற்பச
வென்னப் படுமுயி ரெவைக்கு மலங்கழீஇத்
தன்னை யிரண்டறத் தரும்பிரா னன்றோ
அவனோ டருள்தொழி லநாதிபா மன்றோ
இவர்தரு மநாதிக் கிறுதியு மின்றே
கதியினி தருள்தச காரிய விளக்கம்
கதிசிலர்க் கேயெனக் கழறலு மின்றே
நூலா யினுமதை நுனித்துணர்த் தின்றே
மேலோர் களுமதை விரித்தன ரின்றே
மேலுங் கிளக்க வேண்டா வென்றுமப்
பாலு மிறைவன் பாற்படுத் தனராதை
ஆதலிற் சருவான் மாக்களு முத்தி
சேர்தரு மோய்வு சிவபிராற் குண்டா
மென்பது கொண்டமிக் கென்று வதுவே
மன்பதைக் கதுகொடு மகிழ்வுமூண் டாங்கொல்

செல்வத் திருமந் திரநகர் மேவுஞ்
சைவசித் தாந்த சபையிலிவ் வாத
மெழுந்ததின் விணிகழ் வெனவும் படாதால்
முழுந்திய வன்பார் முத்தைய வேள்தரு
வியன்றச காரிய விளக்கமு மடுத்தெழு
வயமறுப் பிற்கோர் மறுப்புநன் றென்றே
சம்மதித் துள்ளார் தக்கோர்
உண்மையஃ தெனக்கு முடன்பா டாமே.

---

தில்லை விழாகம் சிவானந்தானுபூதி நிலைய மடத்து அதிபதியும் தற்சமயம் திருச்செந்தூரில் ஸ்தலவாசஞ்செய்பவர்களுமாகிய ஸ்ரீலஸ்ரீ

## ஆனந்த சண்முக சரணாலய சுவாமிகள் எழுதியது.

சிவபெருமான் திருவருட் செல்வம் நிறைந்த ஸ்ரீமாந் போ. முத்தைய பிள்ளை அவர்கட்கு

தாங்களியற்றிய தசகாரிய விளக்கமென்னும் நூலை எனதற்ப அறிவாலாய்ந் துணருமாற்றலிலனாயினும் கற்பவை கற்று நின்ற அனுபவ நிலையுடையோர்க்கு அணுத்துணையும் ஐயம் நிகழா தென்பது அரன் குரு வருளாலுணர்ந்து ஆனந்த முற்றிருந்தேன்.

அந்நூற்குத் தற்சமயம் வெளிவந்த மறுப்பும் மறுப்புக்கு மறுப்பும் கிடைக்கப் பெற்று பார்வையிட்டு என் போலிகட்கு இனியொரு காலபம் நிகழா வண்ணம் விளக்குதற்கு முன்னின்ற தங்கள் நன்றியை நாடோறும் சிந்தையில் வைத்தவனாகி திருப்தியுற்றேன்.

பரிதாபி ஸு

புரட்டாசிமீ 16-உ

---

சைவசித்தாந்த மகாசமாஜத்துக்காரியதரிசி சென்னை ஸ்ரீமான்

ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள்

எழுதியது.

அன்பார்ந்த ஐயா!

வந்தனம், தாங்கள் அன்போடனுப்பிய தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு என்னும் நூலை சாவதானமாக வாசித்தேன். அதில் நாட்டப் பட்டுள்ள கொள்கைகள் பண்டை சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பெரியோர்களது உள்ளக் கிடக்கைகளையே முற்றிலுந் தழுவி நிற்கக் காண்கின்றேன்,

18—9—12.

---

குளித்தலை பிரம்மஸ்ரீ
அரங்கசாமி ஐயரவர்கள் எழுதிய
அபிப்பிராயத்தின் சுருக்கம்.

ஒவ்வொரு ஆத்மாவும் முத்தியடையுமா என்பது தான் சரியான கேள்வி. மல நிவர்த்திக்காகவே என்புதனு வாதிகள் அளிக்கப்பட்டன. ஆகவே ஆன்மாமுத்தியடைதல் திண்ணம். ஒவ்வொரு ஆன்மாவும் முத்தியடைதல் சித்தமெனின் எல்லா ஆன்மாக்களும் முத்தியடையுமென்னும் பொருள் பயவாதோ வெனின் பயவாது. எண்ணில வென்பதற்கு தமிழ் சமஸ்கிருதத்தில் அநந்தம் என்பது பொருள். அநந்த மென்றால் அந்தமில்லாதது முடிவில்லாதது என்பது பொருள். முத்தியடையாது பத்தத்தில் மீதி கிடப்பது நியாயமோ வெனின் இதுவரையில் முத்தியடையாமல் ஆத்மாக்களிருப்பதா விழுக்கில்லை யெனின் இனி எத்தனை கோடா கோடி கடந்தும் மீதியிருப்பதாவிழுக்கென்னை? ஆத்மாக்கள் முடிவடைய வேண்டின் காலம் முடிவுடைத்தாதல் வேண்டும். காலம் முடிவுடைத்தென்பதற்கு ஓர் வித யுத்தியுமின்று.

"ஓம் பூர்ணமித;—பூர்ணமிதம், பூர்ணாத் பூர்ணமுதச்யதே, பூர்ணஸ்யபூர்ணமாதாய, பூர்ணமேவா சிஷ்யதே" என்னும் வேத வாக்கியத்தின்படி முழுமையிலிருந்து (மன

திற் கண்ட) முழுமையைக் கழித்தால் மீதியிருப்பது முழு மையேயாம். எத்தனை காலங்கழிந்தாலும் காலத்திற்கள வில்லையாம். இதனால் ஒவ்வொரு ஆத்மாவும் முத்தியடை யுமென்று, கூறலாமே யன்றி எல்லா ஆத்மாக்களும் முத்தி யடையு மென்றும் அதனாற் பஞ்ச கிருத்தியம் முடிவடையு மென்றும் கூறுவது பொருந்தாது. ஸ்ரீமத் உமாபதி சிவ மும் இக்கருத்துக்கொண்டே,

"பிறந்த நாள் மேலும் பிறக்கு நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை" என்று உபதே

சித்தார். ஸ்ரீ சிற்றம்பல நாடிகளும்

"ஒரு கத்துக் கோருயிர்வீ டுற்றுமுயிர் நித்தமெனிற்
சீரைந் தொழிலுஞ் சிதையவரும்—பாரி
லலையாத மெய்கண்ட தேவனே ஆன்மாத்
தொலையாத தெப்படியோ சொல்." என உதகரித்தார்.

ஆன்மாக்களின் தொகை தொலையா தென்பதும் சீரை ந்தொழிலுஞ் சிதையாதென்பதுஞ் சித்தாந்தமாகும். பஞ்ச கிருத்தியம் என்றைக்கு மென்பது அனவரத தாண்ட வம் எனும் வழக்காலு மறியப்படும்.

சிவபெருமானுக்குச் சித்சத்தியே உண்மை வடிவம். சுத்தமாயையிற் காணப்படும் ஜோதிர் மயமான வடிவங்கள்

சிவனைக் காட்டுங் குறிகளே. அவைகளிற் சிவனுறைவது கல், மண், முதலிய விக்கிரகங்களில் உறைவது போலும்,

எமதா ராய்ச்சியிற் புலப்பட்டவாறு யான் உண்மை யுணர்த்தும் பொருட்டன்றி கக்ஷி யென்பதின்று. யாமெல் லோரும் சர்வக்ஞரல்லர். மாறுபட்ட அபிப்பிராயங்களை யுடையதானாலும் சாதுமார்க்கத்தை விடாமல் உலகத்து க்கு உண்மையை உணர்த்த வேண்டுவதுதான் நியாயம். அவ்வாறு திருவருள் யாக்குமாக.

குறிப்பு.

இவர்கள் அபிப்பிராயம் 43 பக்கம் இருந்ததனாலும் அதில் சுமார் 20 பக்கம் வடமொழியா யிருந்ததனானும் வேறு பிரதி எழுதாமல் அச்சிட முடியாதாதலாலும் இடை யிடையே உள்ள அவர்கள் வாக்கியத்தையே எடு த்து எழுதப்பட்டிருக்கின்றது.

---

காரைக்குடி சைவசமய சிரோமணியாகிய ஸ்ரீமான்

ரா. ம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள்

எழுதியது.

---

ஐயா!

தாங்கள் வெளியிட்ட தசகாரிய விளக்கம் பிறரால் மறுக்கப்படவேண்டிய நூலாக என் புத்திக்குத் தோன்ற

வில்லை. மறுக்கின்ற ஸ்ரீ தெ. ச. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதிய புத்தகமும் பார்த்தேன். அவர்கள் ஆன்மாக்கள் அளவிறந்தன என்பதற்கு ஆயிரம் பதினாயிரம் இலக்கம் கோடி என்பதாதி சிற்றெண்ணினைக் கடந்தன வன்றிப் பேறெண்ணினைக் கடந்தனவன் றென்கின்றார்கள். இவ்வாறு முன்னையோர் சொன்னதாக வேனும் நூல்களிலுள்ளதாக வேனும் பசுவிலக்கணத்துள் இதுவு மொன்றாக வேனும் யான் கேட்டறிந்திலேன்.

இனி முத்தியடைந்த ஆன்மாவை விட்டு நீங்கிய மலம் தாரகப் பிரமமாகிய சிவத்தையே தாரகமாகக் கொண்டு வியாப்பியமாயடங்கி நிற்கு மென்றெழுதுகிறார்கள். இதற்கு சமத்தின் மேவும் வியாத்தியே மலம் என்பதைத் தெளிய விளக்குகின்ற செய்யுளை உதாரணங் காட்டினர். இச்செய்யுளின்கண் "சமத்தின் மேவும், வியாத்தியே நீக்க நீங்கி விமலனுளடங்கும்" எனக்கூறியது மலத்தையே யாமென்றுங் கூறுகின்றார்கள். இதனால் மலம் விமலனுளடங்கு மென்பதே இவர்கள் துணிவாயிற்று. ஈண்டு விமல சத்தத்திற்கு யாது பொருள் கூறுவார்களோ? இந்த இடத்தில் விமலசத்தத்தை உபயோகித்த அருமை ஊகிக்கற்பாலது. இனி விமலனுளடங்கு மென்றது மலத்தையே யென்ற இவர்கள் முதலடியில் வீடு சேராவென்றதும் மலத்தையே யென்பர் போலும். இரண்டாவதடியில்

விரவா பந்தமென்றதற்கும் மலமே மலபந்தத்தை விரவா வென்பர் போலும். விமலனுளடங்கு மெனக்கூறியது ஆணவமலத்தையேயா மென்பதனை வியாபக வியாத்தி ஆன் மாவென்றற் றொடக்கத்து வாக்கியங்களால் தெளிந்திடுக என்கின்றார்கள். இச்செய்யுளில் மலம் விமலனுளடங்கு மென்பதை இன்னவாக்கியம் காட்டுகிற தென்று என் சிற் றறிவுக்குத் தோன்றவில்லை. உயிரும் அதில் ஒன்றாய்க் கலந்து நிற்பது மலமும் என்பதே வெளிப்படையாகத் தெரி கின்றது. இச்செய்யுளாலும் வியாபகம் பதியும் வியாப் பியம் பசுவும் வியாத்தியே மலமுமா மென்பது விளக்கமா யிருக்க, மலம் வியாப்பியமாய் விமலனுளடங்கி நிற்கு மென்று கூறி இச்செய்யுளை உதாரணங்காட்டியது பேராச் சரிய மென்க.

பஞ்ச கிருத்தியமும் அநாதி யென்றது கால நீட்சி யின் மரிக்கும் தேவரை அமரர் என்பது போல கால நீட்சி யை விளக்குமே தவிர ஆநாதியாகா தென்கின்றார்கள். அநாதி ஒப்புக்கொண்டால் அந்தங் கூற இசையாதது கரு திப்போலும்.

பஞ்ச கிருத்தியம் என்று முள்ளதாம் ஆகவே எல்லா ஆன்மாக்களும் முத்தி யடைந்தே விடுவதில்லை. இது தெ. ச. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கருத்துக்கு

விரோதமாம். இதற்காகவே அளவிலலாதன என்பது சிற்றெண்ணினைக் கடந்தனவன்றி பேறெண்ணினைக்கடந்தனவன் றென்றும் அநாதி என்றதற்குக் கால நீட்சியே பொருளென்றும் பிள்ளையவர்கள் கொண்டார்கள் போலும்.

தாங்கள் செபதபதியானுதிகட்குபயோக மாக்க வேண்டிய காலத்தை இதிலும் வினியோகிப்பது என் புத்திக்குப் பொருத்தமாகத் தெரியவில்லை. இது உலகர்க்கு திரிபதார்த்த நிச்சயங் கூறி தீ நெறி நீக்கி நன்னெறிப் படுத்த வேண்டிய போதனு மார்க்கமு மன்று.

இனி சிவபெருமானுக்கு சுத்தமாயையிற் றிருமேனி யுண்டென்று தாங்கள் கூறியதை மறுத்து சத்தியிலேயே உண்டென்று அவர்கள் கூறுகின்றூர்கள். தாங்கள் சுத்தமாயையை சத்தியென்று விளக்கியே அவர்கள் கருத்தை மறுக்கின்றீர்கள். இதனுல் இருவர் கருத்தும் ஒன்ருகவே தெரிகின்றது முரண் கோடற்கிட மின்று. நிற்க

"காயமோ மாயையன்று காண்பது சத்திதன்னுல்" என்பதிலுள்ள சத்தி சப்தம் சத்திபேதம் பலவற்றுளின்னதென்பதும் சிவபெருமா னென்றது சிவபேதம் பலவற்றுளின்ன தென்பதும் முக்கியமாகத் தெரிவித்து நிச்சயித்தால் விளக்கமா யிருக்கும்.

தாங்கள் சுத்தமாயை சத்தியே யென்று விளக்கிய விடத்தும் பரிக்கிரக சத்தி யென்றேதான் கூறுகின்றீர்கள். ஆகவே தாதாத்மிய சத்தி வேறென்பதும் விளங்குகின்றது. "காண்பது சத்தி தன்னால்" என்றவிடத்து அச்சத்தியை தாதாத்மிய சத்தி என்று கொள்ளக் கூடாதா? அன்று. பரிக்கிரக சத்தியாகிய சுத்தமாயைதானென்று கொண்டால் சிவபெருமானென்ற சொல்லுக்கும் விஞ்ஞானகலர்களாகிய அநந்த தேவநாயனார் முதலிய சீவவர்க்கத்திலேயே கொள்ள லாமல்லவா? அங்ஙனங் கொண்டால் விஞ்ஞான கலர்க்கு சுத்தமாயையே தனு கரண புவன போகங்களைக் கொடுக்கு மென்பதற்கு விரோதமில்லை. சுத்தமாயை விஞ்ஞானகலர்க்கும் அசுத்த மாயை பிரளயாகலர்க்கும் பிரகிருதி மாயை சகலர்க்கும் தனுவாதியைக் கொடுக்கு மென்ற மரபுக்கும் பொருத்தமாம்.

"காயமோ மாயையன்று காண்பதுசத்தி தன்னால்" என்ற சுருதிக்கு மாயை யென்று பொதுப்படக் கூறியதால் எவ்வித மாயையினாலுங் காயமில்லை. தாதாத்மிய சத்தியி னாலேயே உண்டு. இது விஞ்ஞான கலராதி சீவ வகுப்பைக் கடந்து சுத்தமாயா தீதமாய் நிற்கின்ற சிவத்திற்கேயா மென்று கோடலையே என் சிற்றறிவு பற்றி நிற்கின்றது. இவ்வாறு கொள்ளுங்கால் தாங்கள் காட்டிய ஏனை உதார

ணங்களும் இதற்கிணங்கவே கொள்ளலாமென்றும் நினைக்கின்றேன். இது ஒருவாறு தங்கள் கருத்துக்குப் பொருத்தமாகா தெனினும் அதுபற்றி என் கருத்து முரணுவதின்று.

---

திருப்பரங்குன்றம் பிரம்மஸ்ரீ
காசிவாசி செந்திநாதையரவர்கள் எழுதியது.

அன்புள்ள பிள்ளையவர்களுக்கு ஆசிர்வாதம்.

பஞ்ச கிருத்தியம் நித்தியம், ஆன்மாக்கள் எண்ணிறந்தன என்பவற்றை ஆகம வேதங்களால் நிரூபிக்கலாம்.

சுத்த மாயையிற் சிவபெருமானுக்கு உண்டாகுந் திருமேனி சிவசத்தி வாயிலாகவேயாம். சுத்தமாயை ஜடமாகிய பரிக்கிரகசத்தி. ஆதலின் வியாபக அறிவை சிவ அருட் சத்தி கொடுப்பதன்றி சுத்தமாயா சத்தி கொடுப்பதன்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு.

## முகவுரை.

"தசகாரிய விளக்க" மென்று யான் எழுதிய நூலில் என் சிற்றறிவுக்கெட்டியவாறு ஆன்றோர் அனுபவ வாக்கை ஆதரவாகக்கொண்டு அனேக விஷயங்களையெழுதி, அவ்விஷயங்களிலேதேனுந் திருத்தஞ் செய்ய வேண்டிய திருப்பின் பெரியோர்களெனக்குத் தெரிவிக்கும்படிக்கும், அவ்வாறு தெரிவிப்பின் அதனை யன்புடனேற்று,இரண்டாம் பதிப்புப் பெறுமாயின் திருத்தமறிவித்த அப்பெரியார் பெயரையுங் காட்டி, விஷயத்தையும் வெளியிடுவே னென்றும் அந்நூல் முகவுரையில் தெரிவித்துள்ளேன்.

அந்நூல் வெளியான பின்னர் எனது ஆப்தரும் சிவநேசச் செல்வருமாகிய சேலம் வக்கீல் ஸ்ரீ.அ. சண்முக முதலியாரவர்களும், குருபரம்பரையிலவதரித்தவர்களும் யான் என்றும் போற்றத்தக்கவர்களுமாகிய திருவாரூர் இலக்கண விளக்க பரம்பரை ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிகரவர்களு முதலிய பல பெரியார் பலவிஷயங்களைக் கடித மூலமாக வினவினார்கள். அவர்களுக்கென் சிற்றறிவுக் கெட்டியவாறு விடையுமளித்தேன். அவ்வினாக்களெல்லா மிகவும் பாராட்டத் தக்கனவேயாம்.

இப்பொழுது ஸ்ரீமான் தெ. ச. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தசகாரிய விளக்கத்திற் சில விஷயங்களின் மறுப்பாக "சர்வான்மாக்களு முத்தியைச் சார்ந்தேவிடும்" என்னுந்தலைப்பெயரிட்டு ஒரு புத்தக மெழுதியிருக்கின்றார்கள். அப்புத்தகத்தில் கண்ட விஷயங்களைப்பற்றி யான் தசகாரிய விளக்கம் எழுதுவதற்கு முன்னரே இவர்கள் என்னுடன் வாதித்ததுண்மை. எங்களுடைய வாதத்தைத் தமிழ்ப் பிரமசூத்திர ஆசிரியராகிய ஸ்ரீலஸ்ரீ விருதை சிவஞான யோகிகளிடத்துத் தெரிவித்தபோது அவர்கள் தக்க சமாதானஞ் சொல்லியுமிருக்கின்றார்கள். அச்சமாதானங்களை ஒப்புக்கொள்ளப்பிரியமில்லை யென்றாவது, அதுவிஷயமாக ஓர் வாதசபைகூட்டி ஆராய்ச்சி செய்யவேண்டு மென்றாவது தெரிவிக்காமலும், தங்களபிப்பிராயத்தை முன்னர்க் கூறிய ஆப்தர்கள்போல எழுத்து மூலமா வெனக்குத் தெரிவிக்க முற்படாமலும் மறுப்பாகப் புத்தகம் வெளியிட்டதற்கோர் காரணமுண்டு.

அக்காரணம் வருமாறு:— 1911 ஹு டிசம்பர் மீ கூடிய இந்நகர்ச் சைவசித்தாந்தசபை வருஷோற்சவக்கூட்டத்தில் கல்வி அறிவிற் சிறந்தவராயிருப்பினும் ஒழுக்கமில்லாதிருப்பின் அவரைப்பொருளென மதியே னெனவும், சமயாசார குலாசாரங்களை அநுசரிக்க வேண்டுமெனவும் ஒரு சமயத்தில் யான் சொல்ல நேர்ந்தது. இவ்விரண்டும் நமது

பிள்ளையவர்களுக்கும் அவர்களைச் சார்ந்த வேறு சிலர்க்கு முடன்பாடில்லாமையா லவை காரணமாக இம்மறுப்பை எழுதியிருக்கின்றார்கள்.

பிள்ளையவர்கள் முகவுரையிற் கூறியபடி ஒரே சபையின் கண்ணுள்ள இருவர் வாதி பிரதிவாதியாய் வாதித்தல் கூடாதென்றால் இப்பொழுதுமது கூடாததேயாகும். ஆயினுமவ்வாதத்திற்குப் பிறரால் சமாதானங்கிடையாததுபற்றி யெழுதியதென்றால் எழுதுவதற்கு மூன்று அல்லது ஆறு மாதங்கள் அல்லது ஒருவருஷம் போதாதா? இப்பொழுது எழுதினாலும் இழிமொழிகள் கலவாதெழுதக்கூடாதா? இழிமொழிகள் பலகலந் தெழுதியிருப்பதால் உண்மை தெரியுங் கருத்தன்றி யென்னை அவமதிக்க வேண்டுமென்ற ஒன்றே கொண்டு எழுதியிருக்கின்றார்களென்பது ஒருதலை.

உண்மை தெரியவிரும்பும் நன்னோக்க முடையார் எப்பொழுதுமிவ்வாறு எழுதமாட்டார்களென்றும், பிறரைத் தாழ்த்தித் தன்னை உயர்த்திக்கொள்ள விரும்புவோரே இவ்வாறெழுதுவார்களென்றும் நடுநிலையுடையாரெவருமறியாது போகார்.

இழிமொழிகளையஞ்சாது அடுத்தடுத்துக் கூறுமிடமெல்லாம் "நண்பர் நண்ப" ரெனக்கூறியதனுல் பிள்ளையவர்களின் நயவஞ்சகமும், இழிந்த கொள்கைகளாகிய மாயாவாதம்,

அபவாதம், அவசித்தாந்தம் (படிக்கு முறையில் படியாது செய்து கொண்ட சித்தாந்தம்) உடையாரே பிள்ளையவர்களுக்கிப்பொழுது நண்பர்களாக வமைந்துள்ளார்களென்பதும் எளிது புலனும்.

ஈாமெழுதிய தசகாரிய விளக்கத்தில் சூனியவாதம், நிரீச்சுரவாத மென்பதாதியனவும் பிள்ளையவர்களை அவமதித்தலாகாதோவெனின், ஆகாது. என்னை? அக்கொள்கையுடையார் வேறு சிலருளராதலானும், ஒருவரைக் குறியாது பொதுவாக எழுதியதனுனும் என்க.

புத்தக முகப்பில் "சபைக்காரிய தரிசி" யென தங்களுக்குமருடஞ்சூட்டியும், சபையின் உபாக்கிராசனுதிபதித்தானம் எனக்கிருந்தும் அதனைக் காட்டாமலும் பதிப்பித்த பிள்ளையவர்கள் முகவுரையில் "ஓரே சபையின் கண்ணுள்ள இருவ" ரெனக் கூறியது மறவியே போலும்.

அம்முகவுரையில் "அங்ஙனமாயினு மவற்றுள் எக்கொள்கை சைவசித்தாந்த வல்லார் சமூகத்தில் சித்தாந்தமெனத் துணியப்படுமோ அக்கொள்கையே யெமது சித்தாந்தமாம்" என்றெழுதியுள்ளார்கள். சமூகத்தால் சித்தாந்தமெனத் துணியப்படுவதற்கு வாத சபைகூட்டி வாதித்தல்வேண்டியதிருக்க அதைப்பற்றி ஒருபிரஸ்தாபமுஞ் செய்

ப்பாதுவிட்டது யாது கருதியோ? அன்றியும், "எனது பக்ஷத்தை நாட்டுவான் றுணிந்தேன்" என்று துணிவுடைமை காட்டிய பிள்ளையவர்கள், "எக்கொள்கை சைவசித்தாந்த வல்லார் சமூகத்தில் சித்தாந்த மெனத் துணியப்படுமோ அக்கொள்கையே எமது சித்தாந்தமாம்" என்று துணிவின்மையையும் ஐயப்பாட்டால் விளக்குகின்றார்கள். இங்ஙனம் ஐயப்பட் டெழுதிய நூலுக்கு "சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்" என்று தேற்றேகாரங் கொடுத்துப் பெயரிட்டுள்ளார்கள். ஆகவே, இவர்கள் ஒருகாற் றுணிவுடைமையும், ஒருகால் ஐயமும் கொண்டு முன் பின் முரணக் கூறுதலால் தாமெடுத்த கக்ஷியின் உறுதிப்பாடுடைமை யானன்றி என்பா லுளதாய சீற்றங் காரணமாகவே யிப்புத்தகம் எழுதப் புக்கார்களென்பது பொள்ளெனப் புலப்படுகின்றது. இதனால் பிள்ளையவர்கள் உள்ளத்துள்ள கள்ளக்கருத்தை மெள்ள மறைத்துத் தெள்ளியார் போன்று பகட்டினும் திருவருட் செயலால் உண்மை வெளியாதலுணர்ந்துகொள்வார்களாக.

பிள்ளையவர்கள் என்னிடத்து வைத்திருக்கின்ற அவமதிப்பை இறைவனுக் கர்ப்பணமாக்கிவிட்டு அவர்களுக்கு எவ்விதத்தானும் விடை சொல்லாதிருத்தலே என் கடமையாகும் "மாசாய நெஞ்சுடையார் வாய்திறந்தால் அவர்க

ளோடும் பேசாமலிருந்துவிடல் அதுவன்றே பெருந் தகைமை" என்றார் பெரியாரும்.

ஆயினும் அம்மறுப்பைக் கண்ணுறும் சைவமணிக ளின் பொருட்டு "தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு" என்னுந் தலைப்பெயரால் என்னபிப்பிராயத்தை வெளி யிட்டிருக்கின்றேன்.

பிள்ளையவர்கள் இழிமொழிகள் உபயோகித்த இடங் கட்கெல்லாந் தக்க சமாதானம் சொல்லு முறைமையில் அவர்களைப் பூர்வபக்ஷியாரென அழைப்பதே பொருத்தமாத லால் "மறுப்புக்கு மறுப்பு" என்னும் இந்நூலில் பிள்ளை யவர்களைப் பூர்வபக்ஷியாரென அழைத்திருக்கின்றேன்.

இதன்மேலும் பிள்ளையவர்களுக்காவது மற்றெவர்க ளுக்காவது இப்போது வாதிக்கப்படும் விஷயங்களிலாவது வேறு விஷயங்களிலாவது ஆக்ஷேபணை நிகழுமாயின் ஓர் வாத சபைகூட்டித் தீர்மானித்துக் கொள்ளல் வேண்டும். அதற்குரிய நிபந்தனைகள் சபை கூட்டுங்கால் தெரிவிக்கப் பெறும். அவ்வாறு செய்யாமல் இன்னும் பிள்ளையவர்களா வது மற்றெவர்களாவது எழுதுவார்களாயின் அதற்கு என்னி டமிருந்து விடை கிடைக்கமாட்டாது. அதுகொண்டு பிள்ளை யவர்க ளபிப்பிராயம் நிறைவேறிவிட்டதாக அவர்களும் பிறரும் நினைக்கக் கூடாதென்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

இங்ஙனம்

பொ. மு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# " தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு. "

## காப்பு.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

தசகாரிய விளக்க மறுப்பாக " சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்" என்னும் தலைப்பெயரிட்டு எழுதிய புத்தகத்தில் வாதிக்கப்படும் விஷயங்கள் இரண்டே, யாம். அவற்றுள் ஒன்று 'பெத்தான்மாக்கள் ஒருகாலத்தில் அறவே இல்லாதொழியும்' என்பது. மற்றொன்று 'சிவபெருமானுக்குச் சுத்தமாயையிற் றிருமேனி கிடையாது' என்பது. இவ்விரண்டில் பெத்தான்மா ஒருகாலத்தில் அறவே ஒழியாதென்பதற்கு * "பெத்தான்மாவை நணுகி நிற்குமாதலால் நாசமுமின்றாமே" என்னுந் திருவாக்கை யான் பிரமாணமாகக் காட்டியுளேன். அவ்வாக்கியம் பாடாணவாத சைவரை மறுத்தற் பொருட்டே யெழுந்ததென்றுஞ், சித்தாந்தஞ் செய்தற் பொருட்டு எழுந்த

* சிவஞான சித்தியார் பக்க கூ. செ. கூ.

தன்றென்றும் பூர்வபக்ஷியார், அவர்கள் கூறியிருத்தல் முரணும். என்னை? பூர்வபக்ஷிகளி னபிப்பிராயத்தை மறுக்குமுகத்தால் தம் பக்ஷமாகிய சித்தாந்தத்தை நாட்டுவதும் முறைமையாதலி னென்க. அங்ஙனமாகவும் அப்பக்ஷத்தைச் சித்தாந்த மன்றென்றால், அதனையும் பூர்வபக்கஞ்செய்து வேறு சித்தாந்தஞ் செய்திருக்க வேண்டும். அவ்வாறின்றி "ஆணவந்தா னணுதியந்த மடையாதாகு மந்த வான்மாவுமழியும்" என்ற முதற்பாசுரத்தாலேயே பாடாணவாதியை மறுத்து அம்மறுப்பை வேறுமோர் உவமை கூறுமுகத்தால் வலியுறுத்துவதற்கெழுந்த அடுத்த செய்யுளின் கருத்தைச் சித்தாந்த மன்றென்று பூர்வபக்ஷிபாரவர்கள் கூறியது எத்துணைப் பொருத்த முடைத்தென்பதை அறிவுடையோர் சிறிது கவனிப்பாராக.

அன்றியும் "அவர் வாதத்தை மறுத்து அதன்மேல் அம்முத்தான்மாவை விட்டு நீங்கிய வழியும் ஆணவமலங் கேடுறாது நிற்றலே பெததான்மாவை நணுகிநிற்கக் காணுதலாகிய ஏதுவின் வைத்து நாட்டியதால் பெறப்படுகின்றதென்க" என்றும், அக்கருத்தமைந்த உரைவாக்கியம் இதுவென்றும், தன் சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிப் பூர்வபக்ஷிபாரவர்கள் சித்தாந்தஞ் சாதித்தது, வியப்பினும் வியப்பே.

அவ்வாக்கியம் அவர்கள் சித்தாந்தத்திற் கிணங்காமை மட்டுந்தானு? எமது சித்தாந்தத்தையும் வலியுறுத்துகின்றது. "நான் மறக்கினுஞ் சொல்லு நா நமச்சிவாயவே." என்ற திருவாக்கின்படி மாறுபட்ட கருத்தினையுடைய பூர்வபக்ஷிபாரவர்கள் வாக்கில் உண்மைவசனந் தோன்றியது திருவருட் செயலே போலும்.

மேலும் உரையாசிரியர் சிவாக்கிர யோகிகள் * "துன்னிய மலங்களெல்லாந் துடைப்பதுஞ் சொல்லலாமே" என்ற திருப்பாசுரத்திற்கு "துடைப்பதும் என்ற உம்மையால் பக்குவ வான்மாக்களிடத்து பாசங்களெல்லாம் நீக்கியும், அபக்குவ வான்மாக்களிடத்து பாசங்கள் நிற்கையால் பாசங்களுடைய நித்தியமுங் கெடாதென்பது கருத்து. அல்லது ஏகமுத்தியிற் சர்வமுத்திப் பிரசங்கம் வரும்." என்று சித்தஞ் செய்திருக்கவும், அவ்வாக்கியத்தை யான் தசகாரிய விளக்கத்தி லெடுத்துக்காட்டி யிருக்கவும், பூர்வபக்ஷியாபவர்கள் அதனை யெடுத்தாண்டு விடை சொல்லாதது தங்கள் மதி நுட்பத்துக்கு யோகிகளும் பொருளெனத் தோன்றுமையாற் போலும். அந்தோ பாவம்! பாவம்!!

சர்வான்மாக்களும் முத்திபடைந்த வழி ஆணவமலம் இறைவனிடத்தி லடங்கியிருக்கு மென்பதற்கு பூர்வபக்ஷி

---

* சிவஞான சித்தியார் க கு. செ. ந௲சு.

யாரவர்கள் எடுத்துக்காட்டிய தணிகைப் புராணச் செய்யுளுமவர்கள் கருத்தை வலியுறுத்துதற் கெழுந்த தன்றாம்.

"வியாபக மலமான் மாவுக் கென்றிடின் வீடு சேரா
வியாப்பிய மலமான் மாவுக் கென்றிடின் விரவா பந்தம்
வியாபக வியாப்பி யங்க ளின்றியே சமத்தின் மேவும்
வியாத்தியே நீக்க நீங்கி விமலனி லடங்கு மாற்றால்,,

என்னும் இச்செய்யுளில் "நீக்க நீங்கி விமலனிலடங்கும்" எனக்கூறியது 'ஆணவமலத்தையே யாம் என்று' பூர்வபக்ஷியாரவர்கள் கூறுகின்றார்கள். நீக்க என்றபோது பிறவினை. நீங்கி யடங்குமென்றபோது தன்வினை. நீக்க என்னும் பிறவினைக்குச் செயப்படுபொருள் மலம். நீங்கியடங்கும் என்னுந் தன்வினைக்கு வினைமுதல் உயிர். செயப்படுபொருளிலக்கணம் வினைமுதலிலக்கணமிவைத்தென ஆராய்வார்க்கு இப்பொருளினிது விளங்கும். ஆகவே அச்செய்யுளில் "விமலனிலடங்கு" மென்றது உயிரேயன்றி, மலமன்று என்பதை இனியேனும் பூர்வபக்ஷியாரவர்க ளறிவார்களாக. நீங்கியடங்குமென்னுந் தன்வினைக்கு வினைமுதல் மலம் என்னலாகாதோ வெனின் வினைமுத லறிவுடைப் பொருளாயிருத்தல வேண்டுமாகலானும், மலம் சடப்பொருளாகலானும் ஆகாதென்க அன்றியுமச்செய்யுளில் "வியாபக மலமான் மாவுக்கென்றிடின் வீடு சேரா" வென்பது சங்கை. விமலனிலடங்கு மென்னுஞ் சொல்லால், வீடு சேருமென்பது உத்தரம். வீடு சேராவென்பதற்கு பூர்வபக்ஷியாரவர்கள் கரு

த்தின்படி மலம் வீடு சேராவென்று பொருள்கொள்ளல் வேண்டும்போலும். வீடு சேருதற்குரியது ஆன்மாவே யன்றி மலமன்றென்பதும், வீடுசேரா வென்றது ஆன்மா வீடு சேராவென்றதே யென்பதும், ஆதலின் மலத்தை ஞான தீக்ஷைபால் ஆசிரியன் நீக்க ஆன்மா அதினின்று நீங்கி விமலனி லடங்கு மென்பதே ஆசிரியர் கருத்தா மென்பதூஉம் அச்செய்யுளின் கருத்தென அறிவுடையா ரெவரு மறிவர்.

பூர்வபக்ஷியாரவர்கள் இச்செய்யுளின்கண் "நீக்க நீங்கி விமலனிலடங்கு" மெனக்கூறியது ஆணவ மலத்தையே யாம் என்பதனை

* "வியாபக வியாத்தி யான்மா வினின்விளங் கமலன்சத்தி
வியாப்பிய வியாத்தி யான்ம சத்தியின் விரவுமாயை
வியாபக வியாப்பி யங்க ளின்றியே சமத்தின்மேவும்
வியாத்தியே யுயிரு மொன்றாய் விரவிருள் மலமுமாதோ."

எனவரும் வாக்கியத்தாற் றெளிந்திடுக, என கூறுகின்றார்கள். தெளியும்வழி இவ்வாறென விளக்காதது அச் செய்யுளிலில்லாமை கருதிப்போலும். அதனை யுதாரணமாகக் காட்டியது சிறிதும் பொருத்தமின்றென்பது வெளிப்படையாகலின் விரிப்பின் விரியுமென்றஞ்சி விடுக்கின்றாம். வாக்

* தணிகைப்புராணம் அகத்தியனருள் பெறுபடலம் செ. ௬௱௬௰௫

கியம், செய்யுள் என்னும் சொற்களின் பாகுபாடுணராது பிரயோகிக்கின்ற பிள்ளையவர்களின் மதிநுட்பத்தைக் கற்று வல்லாரறியாது போகார்.

மேலும் அச்செய்யுளில் ஆன்மாவுக்கு மலம் வியாபக மாயின் வீடு சேராவென்றும், வியாப்பியமாயின் பந்தங் கூடாதென்றும், ஆகவே நீக்கலால் வியாப்பியமும் நீங்கி வீடு சேரலால் வியாபகமுமின்றி மலம் வியாத்தியாகிய சமநிறை வாமென்பதை நீக்க நீங்கி விமலனிலடங்குமாற்று'' லென எதுக்காட்டி வலியுறுத்தப்பட்டிருக்கவும், "நீக்க நீங்கி விமலனுளடங்கு மாதோ" எனச் செய்யுளை மாற்றிக்கொண்டது பூர்வபக்ஷிபாரவர்கள் கருத்துக்கியையப்பொருள்கொள் ளுதற்குப் போலும். இங்ஙனம் ஆன்றோர் திருவாக்கை மறைத்துத் தம்மிஷ்டப்படி திருத்தல் பெரிதும் பாவச்செய் கையே யென்பதை யாவர் அறியார்? பிள்ளையவர்கள் அறி யாமை வியப்பினும் வியப்பே!

இன்னுமச்செய்யுளின் கருத்து இதுவே யென்பதனை இதனடுத்துவருஞ் செய்யுட்களும் வலியுறுத்துகின்றன. அச்செய்யுட்களாவன.

* "நீக்கற விராவிநின்ற நிமலனு ளிருக்குங் காலுந்
தாக்கிய மலமெவ் வாறு தணக்குமென் றையங்கொள்ளல்
பூக்களு றருவி னீரம் புலர்பரு வத்துண் மேய
தீக்கடை புவனு லோங்கிச் செறிந்தெலாந் தானேயாகும்."

† "கதிரவ னெழுத லோடுங் கனலிரு ளென்ன மாயு
முதிர்மலம் விளக்கி ளுக்கை முகந்ததன் வினைபோங் காறுந்
வதியும்வாள் விழியி னுவி வாங்கிய வருளி னின்றும்
பதிவயிற் பண்டே நின்ற பான்மையி னுணர்ந்தே நிற்கும்."

இவற்றுள், முதற் செய்யுள் ஆன்மா பெத்த திசையி லிறைவனுளிருக்கவுந் தாக்கிய மலம் முத்திதிசையி லிறைவ னுளடங்கும்போது நீங்குவ தெவ்வாறென சந்தேகிக்க வேண்டாமெனவும், இரண்டாவது செய்யுளில் சூரியோத யத்தி லிருள்போல மலமாயும், எனவுங் கூறியிருத்தல் காண்க. அன்றியும் பிறிதோரிடத்தில்,

‡ "மருண் மலமொழிய மாயையும் வினையும் வயங்க ருளாகியே நிற்கு, மிருண்மல முலகோர்க் கிரித்திட வவற் றை யெம்பிரா னென்றுகொண் டருளுஞ், சுருதியான் மொழியாற் சுவானுபூதிகத்தைத் தோற்றியவிமலனையாக்கு,

* தணிகைப்புராணம் நந்தியுபதேசப் படலம் செ. ௩ாகூ௰௭,
† ௸ ௸ செ. ௩ாகூ௰௮.
‡ ௸ ௸ செ ௩ாஉ௰௩,

மிருபகுப் பிறநின் றேத்திபின் புறப வினையசன் மார்க்க முற்றவரே.”

எனக் கூறியிருத்தலால் ஆணவ மலத்தொடு மாயையுங் கன் மமுமே இறைவனாலென்று கொள்ளப்படுமென்று வெள்ளி டை மலைபோல் விளங்கிக் கிடக்கின்றது. இவற்றாலெங் கேனும் மல முதல்வனு ளடங்குமெனக் கூறப்பட்டிருக்கி ன்றதா? இல்லையே. இவற்றையெல்லாம் எடுத்துக்காட் டாது விடுத்ததே உண்மையறியு நன்னோக்கம் பூர்வபக்ஷியா ரவர்களுக்கின் றென்பதை நன்கு நாட்டும்.

அன்றியும் ஆன்றோர்க்குடன்பாடில்லாத ஓர் விசித்தி ரக் கொள்கையை பூர்வபக்ஷியாரவர்கள் புதிதாக அறிந்து பிறர்க்குபதேசிக்க முற்பட்டதோ டமையாது அக்கொள் கை ஆசிரியர் கச்சியப்ப முனிவருக்கு முண்டென்று நாட் டப் புகுந்த துணிவி னதிபாதகத்தை யென்னென்று சொல் வேன்?

* “நூலினை யறிந்தார் போன்று நுண்ணறிவுடையார் போன்று, மாலினைத் தவிர்ந்தார் போன்றும் வழியறிந் தடைந்தார் போன்று, மேலெனத் தத்தங்கோளே விதந்தலை நின்றோர் நந்தி, சாலவன் றருளு நூலிற் றலைப்படா வுள்ளத் தாரே.”

---

* தணிகைப்புராணம் நந்தியுபதேசப் படலம் செ ௱௪௮.

என்னும் திருவாக்கு பெரியோரால் முன்னமே அருளிச் செய்யப்பட்டிருத்தலின் மாறுபட்ட கொள்கையினையுடையார் என்றுமிருப்பது சகசமென அறிவுடையோர் ஆறுதலடைவாராக.

இனி ஆன்மாக்கள் அளவிலாதன வென்பதற்கு எடுக்க எடுக்கக்குறையாதென்பதே பொருளென யான்கூறி

*" பிறந்தநாண்மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை"

என்னுந் திருவாக்கை ஆகரவாகக் காட்டியுள்ளேன். பூர்வபக்ஷிபாரவர்கள் அவ்வாக்கியமென்கருத்தை வலியுறுத்துவதற்குப் போதிய சான்றில்லையென்றாவது, அவ்வாக்கியத்திற்குப் பொருளின்னதென்றாவது ஒன்றுமே கூறாமலும், தசகாரிய விளக்கத்தில் யான் கூறாத உலவாக்கிழி விஷயத்தை தாமாக வலிந்திழுத்துக் கொண்டு உலவாக்கோட்டை யருளிய பாட்டை எடுத்துக்காட்டி, அப்பாட்டிலில்லாத புதிதாய் உண்டாய்விடுமென்ற பொருளையும், கற்பனை செய்து, தாமேஉண்டாய்விடுமாயினும் உண்டாகும் முறையில் வினைப் பொருட்குமிதற்கும் வித்தியாசமுண்டென்றாவது இல்லையென்றாவது உண்டென்றால் அது

* திருவருட்பயன் உ-வது உயிரவைநிலை ௰௧.

இன்னதென்றுவது காட்டாமல் என் அபிப்பிராயத்தை மறுத்திருக்கின்றார்கள். நான் எடுத்துக்காட்டிய வாக்கியம் சித்தாந்த சைவப் பெரியார் வாக்காகவும் அதனை யெடுத்துச் சமாதானங் கூறுதது தர்க்க முறையாகுமா? அன்றியும் பெரந்தான்மாக்கள் அறவே ஒருகாலத்தி லில்லாதொழியும் என்ற வாதத்தில் நூற்பிரமாண மொன்றுங் காட்டாமல் யுக்தி வாதத்தை யெழுதத் துணிந்ததும் வாதமுறைமை யாகுமா? இங்ஙனம் முறைகடந் தெழுதிய நமது பூர்வ பக்ஷிபாரவர்கள் என் கொள்கையைப்பற்றி "இவ்விழிந்த கொள்கையை உயர்ந்த சைவசித்தாந்தத்திற்குத் தேடித் தந்த நண்பர் செயல் அசைவரால் என்று மறுக்கற்பாலதன்றாயினும் சைவரால் என்றும் வெறுக்கற்பா லதேயாம். பெரிய தோர்பாவச் செய்கையுமாம்" என்று கூறியுள்ளார்கள். பூர்வபக்ஷிபாரவர்கள் அசைவரைச் சைவராக்க முயன்றுகொண்டிருப்பதால் அம்முயற்சி அசைவரால் பாராட்டப்படுவதும், சைவரால் வெறுக்கப்படுவதும், பூர்வாசிரியர் கருத்தைத் தழுவாததால் பாவச் செயலுமாதலின் தங்களிடத்துள்ள அவற்றை என்னிடத்தி லிருப்பனவாகக் கூறியது அவர்கள் செயல் நோக்கப் பொருத்தமுடையதேயாம். விஷய ஆராய்ச்சியி னுணுக்கத்தால் தங்களை உயர்த்திக் கொள்ளலேயன்றி ஆரவாரமாக இழிமொழிகள் பிறர்பாற் கூறி உயர்த்திக்கொள்ள எண்ணுதல்

மரபன் றென்பதை இனியேனும் பூர்வ பக்ஷியாரவர்க ளறி வார்களாக.

இவ்வாதம் நீண்டகாலமாக இருந்து வருகின்றது. முன்னர் சிதம்பரசுவாமிகள் அவிரோதவுந்தியாரில் சயஅ-வது செய்யுளுரையில் இதைப் பற்றி ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள். பின்னர் நமது பூர்வ பக்ஷிபாரவர்கள் ஆசிரியராகக் கொண்டுள்ளசென்னை வைதிகசைவசித்தாந்தசண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகரவர்கள் தாங்களியற்றிய சித்தாந்த சேகரமென்னும் நூலிலிதைப்பற்றித் தங்களபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கின்றார்கள். அது வருமாறு.

சித்தாந்த சேகரம் யஎ-வது பக்கத்தில் " ஆன்மாக்கள் நித்திய மாதலானும் முத்தியடைந்தோர் பிறப்பின்கண் திரும்பாமையானும் அநாதியே பஞ்ச கிருத்திய மொழிய வேண்டுமே யெனின் "பிறந்த நாண்மேலும் பிறக்குநாள் போலும், துறந்தோர் துறப்போர் தொகை "என்னும் பிரமாண முகத்தால்மேல் ஆக்ஷேபம் நிரஸ்தமாமென்க."

"சிருட்டிக் கொருவர் முத்தியடையினும் எண்ணிறந்த சிருட்டியில் எண்ணிறந்த வான்மாக்களும் முத்தியடைவார்கள். முன்னிறந்த காலத்திற்கு அளவின்மையால் அநாதியே பஞ்ச கிருத்திய மொழிந்திருக்கவேண்டும்."

அங்ஙனம் ஒழியாது பஞ்சகிருத்தியம் வர்த்திப்ப தெங்ஙன மெனின் இது வேதாகமத்திலில்லாத விநோத விசித்திர மாம். ஆன்மாக்களோடு கால ஒழிவையும் விசாரித்தால் மேல் ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் பிறக்குமாகையால் எண்ணிறந்த கிருட்டியில் எண்ணிறந்த வான்மாக்கள் ஒழிந் திருக்கவேண்டுமே யென்பது பரிபாகத்தாட்சியாம். கால் ஒழிவே ஆன்மாக்க ளொழிவென்று தெளியத்தக்கதாம். கால மொழியுமோ வெனின் குரு முகந்தா லுணர்க" என்பதேயாம்.

இவ்வாறு கூறிய நாயகரவர்க ளபிப்பிராயத்தை எடுத் துக்காட்டி பூர்வபக்ஷிபா ரவர்கள் சமாதானஞ் சொல்லாதது யாது கருதியோ? சமீப காலத்துள் நாயகரவர்கள் கருத் திதுவென்பதை பூர்வபக்ஷிபாரவர்களுக்கு ஞாபகப் படுத்தியு மிருக்கிறேன்.

மூன்றாற் பிரமாண மொன்றுமே காட்டாது தங்கள் யுக்தியே பெரிதென வெண்ணி வாதிக்கப் புகுந்த பூர்வ பக்ஷிபாரவர்கள் பெத்தான்மாக்களறவே ஒழியா தென்றத னால் "பஞ்ச கிருத்தியத்தை பயனில் கிருத்தியமாக்கல் சைவ சித்தாந்தத்தை தத்துவ விருத்தமான மதங்களி லொன்றாக வாக்கல் சூனியவாத மதமாக்கல்" என்று முக் குற்றங்களுள வென்றார், இவற்றிற்கெல்லாம் தக்க சமாதா

ணம் யான் தரவேண்டுமென்றும் கூறியுள்ளார்கள். நாயகரவர்களுக்குந் தெரியாத இம் முக்குற்றங்களை பூர்வபக்ஷியாரவர்கள் நுண்ணிய அறிவாற் கண்டுபிடித்தது மிகவும் பாராட்டத்தக்கதே. அம்மட்டி லமையாது அவற்றிற்கு யான் சமாதானங் கூறவேண்டு மென்றது தசகாரிய விளக்கத்தை நன்கு படியாமையாற் போலும். என்னை? அந்நூல் ௮௰உம் பக்கத்தில் "எடுக்க எடுக்கக் குறையாததற்கு ஏது வெண்ணையெனின்" என்றெடுத்துக்கொண்டு அது ஆராய்ச்சியறிவிற்குப் புலப்படுவதொன்றன்று; அனுபவ அறிவிற்கே புலப்படுவதாம். ஆதலின் ஞானசற்குருவை யடுத்து ஞானசாதனத்தி லுறைத்துச் சிவானுபவம் வரப்பெறின் தானே விளங்கும். தேசிகரு முணர்த்துவர். எனக் கூறியிருத்தலாலென்க. இவ்விஷயம் கேட்கு முறையில் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடித் தெரியவேண்டுமெனல் பூர்வபக்ஷியாரவர்களுக்குத் தோன்றாததே அவர்களுக்குரிய ஆராய்ச்சியையும் பரிபாகத்தையு மினிது புலப்படுத்தும். இக்காரணங்கொண்டு பூர்வ பக்ஷியாரவர்கள் பேரறிவுடையவர்களாக மதிக்கப்பட்டும், யான் சிற்றறிவுடையவனாக அவமதிக்கப்பட்டும் பிறர்க்கும் பூர்வபக்ஷியாரவர்களுக்குந்தோன்றினு மதனை அன்புடனேற்று நன்றி செலுத்துங் கடப்பாடுடையனே யன்றி ஒரு சிறிதும் வெறுத்து வருந்துவேனல்லன்.

* ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதிமாண்புங்
கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா
கோட்பாலனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால்வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார்''

எனவும்

§ ஏதுக்களாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள்சோதி
மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீரிறையே வந்துசார்மின்களே''

எனவும்

† ''உரையற்ற ஒன்றை உரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போலச் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்று நின்றான் புரிசடையோனே'' எனவும்

அருளிய அனுபவமுடைய தேசிகர்கள் திருவாக்கு களை அறிவுடையார் சிறிது கவனிப்பாராக.

---

* திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம் சமணரை வென்ற பதிகம் செ. ௨.

§ ஷை. ஷை செ. ௫.

† திருமந்திரம், அ-ம் தந்திரம் சோதனை செ. ௰௪.

இனி பூர்வபக்ஷிபாரவர்கள் தடத்த இலக்கண சொரூப இலக்கணங்களைப்பற்றியான் உள்ளவாறுய்த்துணரப் பெருக்துறைவினுல் செய்து கொண்டதோர் அவசித்தாந்த முடிவேயாமென்றும், தடத்தசிவக்கோலம் இடையில்வந்ததென்றும், பின்னொருகாலத்தில் நீங்கு மென்றும், சொரூபசிவம் என்று மிருக்கு மென்றும் நோயாளியையும் வைத்தியனையும் உவமையாகக் கூறியுள்ளார்கள்.

வாதமில்லாத பொழுது பிரமாணமின்றியு மெழுதலாமே யன்றி வாதம்வந்தபொழுது பிரமாணங் காட்டவேண்டியதவசியமென்பதனைப் பூர்வபக்ஷியாரவர்கள் அறிந்திருந்தும் பிரமாணமகப்படாமையால் யுக்திவாதத்திற் புகுர்தார்கள் போலும். அவ்வாதம் பொருத்தமின்றென்பதை யுக்தியினுலும் பிரமாணத்தாலும் காட்டுதும்.

அரசன் சொரூப சிவத்துக்கும் அவனிடத்துள்ள மந்திரியாதிபல உத்தியோகம் தடத்த சிவத்துக்குமுவமானர். அரசனுக எதுவரையிலிருக்கின்றுனே அதுவரையில் மந்திரியாதிபல உத்தியோகங்களுமவனிடத்திலிருக்கும். அவ்வுத்தியோகங்கள் என்றைக்கு அவனிடத்திலில்லாமற் போகுமோ அன்றைக்கே அரசத்தன்மையு மில்லாமற் போய்விடும். எவ்வாறெனில் உத்தியோகத்தராலாளப்பட்ட குடிகள் நீங்கும் போது தான் அரசன் அம்சமாகிய உத்தியோ

கங்களும் நீங்கும். அவைகள் நீங்கவே அரசத்தன்மை யிருக்குமென்றல் பிரத்தியட்ச விரோதமாதலினென்க. இது போல உபமேயத்தினும் உய்த்துரைத்துக் கொள்க. சர்வ சங்காரம் மீளத்தோற்றுவித்தற்கேதுவாய் ஒடுக்கினவத் தலால் இக்குற்றத்திற் குட்படாது. அது விடுமுறை நாளில் உத்தியோகசத்திகள் தொழிற்படாமல் அரசன் ஒடுக்கிவை த்திருத்தல் போலலென்க. அரசனிடத்துள்ள ஏனை உத்தியோக சத்திகள் தொழிற்படுங்கா லதற்குரிய வேறு வடிவங்களை ப்பெற்றே தொழிற்படும். அவ்வடிவங்களும் அவ்வவ் வுத் தியோகப்பெயரைப் பெறும். பெறினும் உபசாரமே யன் றி உண்மையன்று. எல்லா உத்தியோக சத்திகளுக்கும் அரசவடிவமே உண்மையானவடிவம். இதுபோல சுத்த சிவனிடத்துள்ள சிருட்டியாதிசத்திகள் தொழிற்படுங்கால் சிவனின் வேறான அதற்குரிய சுத்தமாயையின் வடிவத் தைப்பெற்றே தொழிற்படும். அவ்வடிவங்களும் அவ் வப் பெயரைப் பெறும். பெறினும் உபசாரமேயன்றி உண்மையன்று. உண்மை சுத்தசிவனுக் குரிய வடிவமே. இதுபற்றியே

"சுத்த தத்துவஞ் சிவன்றன் சுதந்திர வடிவமா கும்" என்ற செய்யுளுரையில் ஆசிரியர் சிவஞான யோகி கள் அதிட்டானத்தை வடிவ மென்றுபசரித்தாரென்றரு ளிச் செய்வாராயினர்.

உண்மை சிவவடிவே என்பதனை சுத்த சிவமாகிய சொரூப சிவமே தன்னிடத்திலுள்ள தடத்த சிவமாகிய சத்திகள் வேறுபாட்டானும் அச்சத்திகள் அதிட்டிக்கும் ஆதார வேறுபாட்டானு மவ்வவ்வப் பெயர் பெறுமென அருளிச்செய்த

* "ஞானமே யானபோது சிவன்றொழின் ஞானமொக்கி
னீனமில் சதாசிவன்பே ரீசனுந் தொழிலதேறி
ஞானமேற் கிரியை வித்தை யுருத்திரனிலயபோக
மானபே ரதிகா ரந்தோ டதிகா ணத்தனுமே" என்

னும் திருவாக்கு நன்கு வலியுறுத்தும்.

அச்சிவசத்திகள் அதிட்டிக்கு மாதாரம் சுத்தமாயை என்பதனை

† வித்தையோ டீசர் சாதாக்கியஞ் சத்திசிவங்களைந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்திரவடிவமாகு
நித்த மென்றுரைப்பார் காலநீங்கிய நிலைமையாலே
வைத்திலர் முற்பிற்பாடு வருவித்தார் கருமத்தாலே"

என்னும் திருவாக்கால் தெளிக. அன்றியும் பூர்வ பக்ஷிபாரவர்கள் எடுத்துக்காட்டிய நோயாளி வைத்தியனுவ

---

* சிவஞானசித்தியார் சூ-ம். க. செ. சுயஉ.
† ௸ ௸ செ. சுயசு.

மையையே "மரபு" என்னும் நூலில் எடுத்துக்காட்டி, பஞ்ச கிருத்தியம் நித்திய மென நாட்டப்பட்டிருக்கின்றது. அந் நூலிலுள்ள வாக்கியம் வருமாறு. "மலமுடைய பசுக்கள் எண்ணில்லாதலால் கிருத்தியம் நித்தியம். இது எது போலவெனில் தீர்ந்துபோகிற வியாதிக்குச் செய்யும் வைத்தியம் வியாதியுடனே ஒடுங்கிப்போகாமல் பிணியாளர் பலராதலால் வைத்தியமொடுங்காது. இதுபோலவென்றறிக." என்பதேயாம். இங்ஙனம் நூற் பிரமாணமும் கிருத்தியம் நித்தியமென நாட்டுகின்றது. நாட்டவும் நோய் "மூலதோஹானியாக முற்றுங் கெடு" மென்று மரபு ஆசிரியருக்குந் தோன்றாத மாட்சியான அபிப்பிராயத்தைக் காட்டி பூர்வ பக்ஷியாரவர்கள் மகிழ்கின்றார்கள். அம்மட்டி லமையாது முப்பொருள்களும் தோன்றி யொடுங்குவதாகிய பஞ்ச கிருத்தியங்கட்குட் படுங்காற் பொதுவியல்பென்றும்; பதி, பசு, பாசமென்னும் பஞ்சகிருத்தியங்கட் குட்படாத நிலைமையில் சிறப்பியல்பென்றும் சிவம் ஆன்மா மலம் என்றும்; பேர்பெறுமெனக் கூறும் மெய் நூல்களின் கருத்தையும் "பதியினைப் போல் பசுபாசமனாதி" என்றருளிய திருமூலர் திருவாக்கையு முற்றுநோக்காது பொதுவியல்பாகிய பதி பசு, பாசங்க "ளிடையே தோன்றி இல்லையாய் ஒழிந்து போத லுண்மையே" யென்றும், பஞ்சகிருத்தியம் அனாதி யென்றது "கால நீட்சியின் மரிக்கும் தேவரை கேடிலரென்

றதுபோல்பிரவாகவனாதி" யென்றும் ஓர் புதுமதமும் கற்பிக்கின்றார்கள். இதுவிந்தையினும் விந்தையே.

மேற்கூறிய அரசஉவமை தசகாரியவிளக்கத்திலும் யான் எடுத்துக் காட்டியுள்ளேன். அதற்குச் சமாதானஞ் சொல்லாமல் பூர்வபக்ஷிபாரவர்கள் தங்கள் மனம் போனவாறெல்லாம் இழிமொழிகளை உபயோகப் படுத்தி எழுதத் துணிந்தது கலியின் கொடுமையேயன்றி மற்றென்னென்பேன்.

பூர்வ பக்ஷியாரவர்களின் முதலாவது வாதத்திற்கிதுகாறுங் கூறியவாற்றால் பெத்தான்மாக்கள் அறவே ஒருகாலத்தில் இல்லாதொழிதல் கூடாதென்பதும், அதனால் பஞ்சகிருத்தியம் நித்தியமென்பதும், சொரூப சிவம்போல் தடத்த சிவமும் அனாதி யென்பதும், சர்வசங்கார மிக்கருத்தை மறுக்காதென்பதும் நாட்டப்பட்டன.

இனி பூர்வபக்ஷியாரவர்களின் இரண்டாவது வாதமாகிய சிவபெருமானுக்கு சுத்தமாயையிற்றிருமேனி கிடையாதென்பதைத் பற்றி ஆராய்வாம்.

"காயமோ மாயையன்று காண்பது சத்திதன்னால்" என்பதாதிய சித்தாந்த வாக்கியங்களால் சிவபெருமானுக்கு

மாயையிற்றிருமேனி கிடையா தென்றும், சத்தியிலேயே திருமேனி யுண்டென்றும் பெறுவதுண்மையே. பெறினும் மாயையாவதிது வென்றும், சத்தியாவதிது வென்றும் ஆராயாமல் இத்திரு வாக்குகளுக்குப் பொருள் காணப்புகின் உண்மை விளங்காது. அதுபற்றி அவற்றை ஆராய்ந்தே பொருள் கொள்ள வேண்டுமென்பதை பூர்வ பக்ஷியாரவர்கள் கவனியாது சொன் மாத்திரையாலே திரிபுணர்ச்சி கொண்டுள்ளார்கள். அதனுண்மையை விளக்குதும்.

மாயையாவது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை யென முத்திறப்படும். அவற்றுள் பிரகிருதிமாயையை வித்தியா தத்துவத்தி லொன்றாக வைத்தெண்ணுவாரும் ஆன்மதத்துவத்துக்கு முதலாக வைத்தெண்ணுவாருமாக ஆசிரியரிருதிறத்தர். எவ்வாறாயினும் அது தத்துவங்களி லொன்றாக வைத்தெண்ணப்படுவதேயாம்.

அசுத்தமாயை மும்மலத்தி லொன்றாக வைத்தெண்ணப்படுவது இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாயுமுள்ளது இது பற்றியே * "விமலனுக்கோர், சத்தியாய்ப் புவன போக தநுகரணமு முயிர்க்காய், வைத்ததோர் மலமாய்" எனவும் † "உயிர்களெல்லா மருவிடமாய் பலமாய் மன்னி

* சிவஞான சித்தியார் சூம் உ. செ. ருயகூ-

† சிவப்பிரகாசம் சூம். உ. செ. சு.

யிடு மரனருளால் மாயை தானே" எனவும் ஆசிரியர்களருளிச் செய்வாராயினர்.

சுத்தமாயை மும்மலத்து ளொன்றாக வைத்தெண்ணப்படாததாய், விந்து சத்தியென்னும் பெயருடையதாய், இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் விளங்கும். இதனை "விந்து சத்தி சிவம்" என்னும் சித்தியார் திருப்பாசுரத்தாற்றெளிக. இதனால் அசுத்தமாயைக்கு மாயை யென்றும், சுத்தமாயைக்குச் சத்தி யென்றும் பெயருண்டென்பது இனிது விளங்கும். விளங்கவே மாயை தான் மலத்தைப்பற்றி வருவதென்றதனால் மும்மலத்து ளொன்றாகிய அசுத்த மாயையில் அம்மலத்துள் கட்டுண்ட உயிர்கட்குடல் வருமென்றும், "காயமோமாயையன்று காண்பது சத்தி தன்னால்" என்றதனால் இறைவனுக்குத் திருமேனி அசுத்தமாயையிலன்றி சுத்தமாயையாகிய சத்தியிலென்றும் இனிது புலனாம்.

சத்தி யென்றது சிற்சத்தி சுத்தமாயாசத்தி இரண்டனையுங்குறிக்கும் பொதுச்சொல்லாதலின் ஈண்டு சுத்தமாயையின் பொருட்டாம்.

இதுவே நூலாசிரியருக்கு முரையாசிரியருக்குங் கருத்தாம். யாங்ஙனமெனின் "காண்பது சத்தி தன்னால்" என்று கூறிய ஆசிரியருக்கு "காண்டல் சிற்சத்தி தன்னால் என்று

கூறமுடியாதா? அவ்வாறன்றி சத்தியெனப் பொதுப்படக் கூறினமையானும், இது விடைச் செய்யுளாதலின் முன்னைய தடைச் செய்யுளில் "மாயையென்னின் வடிவெலா மாயை யாமே" எனக்கூறியதனாலும், மாயையென்ற சொன்மாத் திரையாலே சுத்த மாயையை மாயை யெனக் கொள்ளக் கூடாதெனவு, மதனைச் சத்தியெனக் கொள்ளவேண்டுமென வும், முதல்வன் திருமேனி கொள்ளுதல் சுத்த மாயையாகிய சத்தியே யெனவும் நூலாசிரியருக்குக் கருத்துண்மையறிக. இதனை *"சுத்த தத்துவஞ் சிவன்றன் சுதந்திர வடிவமாகும்" எனவும் 0 "சைதன்யங்களைந்து" எனவும் அருளிச்செய்த திருவாக்குக்களும் வலியுறுத்தும்.

அன்றியும் விந்து குண்டலினியென பவுட்கராகமத்தி னும், வித்தை மாயை பரை பரவாகீஸ்வரியென சிந்தியாவிசுவசாதாக்கிய முதலியவற்றினும் மகாமாயையின் பரியாய நாமங்கள் கூறப்பட்டிருத்தலால் சத்தியென்பதற்கு சுத்த மாயையெனப் பொருள் கோடல் இழுக்காது என்பதனை நன்கு தெளியலாம்.

இனி உரையாசிரியர் சிவஞான யோகிகள் சத்தியென் பதற்கு மலநீங்கிய உயிர்க்கு வியாபகஅறிவைச் செய்யுஞ்

* சிவஞான சித்தியார் சூம். க. செ. சுமசு.
0 ஷை சூம். உ. செ. சுமகூ.

சத்தியென்று மேலே கூறி, முடிவில் வியாபகமாய் அறியும் பசு பதிக்கு ஏகதேசப்படும் தகுதியில்லாத சத்தியே உருவென வலியுறுத்தினர். வியாபக அறிவைச் செய்யும் சத்தியென்றது சுத்த மாயையை யென்பதனை "விந்து சத்தி சிவமிவை மிசையாம்" என்ற செய்யுளில் சிவமென்பது ஈண்டுச் சுத்தமென்னும் பொருட்டென்று எடுத்துக்கொண்டு ஏனைக்குண்டலினி சத்தியோவெனின் அது சுத்தமாய் இவை அனைத்திற்கும் வியாபகமாய் நிற்குமெனக் கூறியவாற்றாலறிக.

இவ்வுரையில் நமது பூர்வ பக்ஷியாரவர்கள் முதல்வன் சிற்சத்திவடிவினன் என்பதை எவ்வாற்றானும் மறுக்கமுடியாத ஏதுக்காட்டி நாட்டியிருப்பதாக (சித்) என்னுமொரு சொல்லை மெல்ல நுழைத்திருக்கின்றார்கள். "சத்தி தன் வடிவேதென்னில்" என்ற செய்யுளுக்கு சிவ சத்தியின் சொரூபம் யாதெனின் என (சிவ) சத்தத்தைப் புணர்த்திய உரையாசிரியர் இச்செய்யுளில் பூர்வ பக்ஷியாரவர்கள் போல் (சித்) சத்தத்தைப் புணர்த்த அறியாது விட்டனர்போலும்.

இன்னும் "ஐந்து சுத்தத்தின் கீழ்" என்ற செய்யுளுக்குரையாசிரியர் மறைஞான தேசிகர் சிவதத்துவமைந்தும் அவ்விடங்களில் புவனங்களைச் சேர்ந்த ஆன்மாக்கட்கு சர்வஞ்ஞத்துவம் சர்வகிருத்தியங்களை விளக்குவதற்குச் சாதனமாகையால் சுத்தமென்றும், வித்தியா தத்துவம் ஏழும்

ஆன்மாக்கட்குச் சிறிது அறிவை விளக்குதற்குச் சாதனமாயையால் அசுத்தமென்றும் உரை கூறினர். மாதவச் சிவஞான யோகிகள் இவ்வுரையை மறுக்கவில்லை. உடன்பாடின்றாயின் மறுத்திருப்பார்கள். ஆதலின் மல நீங்கிய உயிருக்கு வியாபக அறிவைச் செய்யுஞ் சத்தி யென்றது சுத்தமாயையையே என்பது நிராக்ஷேபமாம்.

அன்றியும் "வித்தையோடீசர் சாதாக்கியஞ் சத்தி சிவங்களைந்துஞ், சுத்த தத்துவம் சிவன்றன் சுதந்திர வடிவமாகும்" என்ற செய்யுள் இலயபோக அதிகாரங்கட் கேதுவாய் நின்ற அதிகரணங்கள். (ஆதாரங்கள்) யாவை? அவற்றியல்பென்னை? என்னும் வினாவிற் குத்தரமென்றும், அச்செய்யுளினுரை முடிவில் சுத்த சிவ னொருவனே இவ்வதிகரணங்களைப் பற்றிய வியாபார பேதத்தாலங்ஙனம் மூன்றவத்தை யெய்துவன என வேறுமோர் ஆசங்கை எழுப்புவதற்காக அநுவதித்துமுள்ளா ராதலானும், "பண்டப்பாதி தொழிலும்" என்ற செய்யுளுரை முடிவில் இவையனைத்துஞ் சுத்த மாயையிற் படுங் காரியங்களை நோக்கி எனக் கூறியிருத்தலானும், "சைதன்யங்களைந்து" என்றதற்கு சடமாயினும் சிற்சத்திக்குச் சுதந்திர வடிவாகலின் சைதன்யமெனப்படும் என்றதனானும் உரையாசிரியர் சிவஞான யோகிகட்கும் சிவபெருமான் சுத்தமாயையிற் றிருமேனி கொள்ளுதல் கருத்தாதலறிக.

ஏனை உரையாசிரியர்கட்கும் இதுவே கருத் தென்பது ஞானசித்தியார் உ-சூம் ௪௰௬-வது செய்யுளில் ஆசிரியர் சிவாக்கிர யோகிகள் சுத்த மாயையிற் றோன்று மஞ்சுதத் துவமும் சாக்ஷாத் சிற்சத்தியினால் அதிஷ்டித மாகையால் சைதன்ய மென்றும்,

௭௰-வது செய்யுளில் ஆசிரியர் மறைஞானதேசிகர் சுத்த மாயையிற் சிவன் கொள்ளுந் திருமேனிக் கேதுவாய் வந்ததாய் சிவனுக்குள்ளதா யிருக்குமாதலால் பிரேரகாண்ட மென்றும்,

௭௰௪-வது செய்யுளில் ஆசிரியர் நிரம்பவழகியர் சுத்த மாயையிலே சிவன் கொள்ளப்பட்ட திருமேனிகள் சிவன் முதலாக பிரமா ஈறாக ஒன்பது பேதமாயிருக்கு மென்றும்,

மேற்கூறிய ௪௰௬-வது செய்யுளில் ஆசிரியர் ஞானப் பிரகாசர் சிவதத்துவம் ஐந்தும் சிவசத்தி ரூபமாதலால் சாக்ஷாத் சைதன்யமெனவுங் கூறுதலானும், ஆசிரியர் சுப் பிரமணிய தேசிகருரை ஆசிரியர் சிவஞான யோகிகளின் பொழிப்புரைக்குப் பதவுரையே யன்றி வேறின்றாதலா னும்,

சிவப்பிரகாசம் இரண்டாஞ் சூத்திரம் மூன்றாவது செய்யுளுரையில் சிவம் சத்திநாத விந்துவாகிய நான்கும்

சிவனுக்கு நிட்களமான திருமேனியென்றும், இலயத்தான மென்றும், சதாசிவ தத்துவம் சகளநிட்களமான திருமேனி யென்றும் போகத்தானமென்றும், ஈஸ்வரம் முதலிய நான் கும் சகளமான திருமேனியுமாய் அதிகாரத்தானமுமா யிருக்குமென்றுங் கூறி யிருத்தலானும் உரையாசிரியர் யாவருக்கும் சிவபெருமான் சுத்தமாயையிற் றிருமேனி கொள்ளுவர் என்பது ஒத்த துணிபாதலறிக.

அன்றியும் சிவப்பிரகாசத்தில்

"உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத
முதிக்குமிகுங் குடிலைதனில் விந்துவரு நாதந்
தன்னிலதி னொளிவளருஞ் சதாசிவ ராமவரிற்
றயங்கவரு மீசர்வித்தை தனையளிப் பரதனுன்
மன்னுவரிவ் வகையவர் வாய்மையினுன் முன்னே
வந்திடுமெ ன்றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவு ளுக்குமாதி யொருநான்கு மென்று
மொழிந்திடுவ ருங்கலைகண் முதிர்ந்து ளோரே."

எனக்கூறி யிருத்தலால் ஆசிரியர் உமாபதி சிவாசாரிய ருக்கு மிறைவனுக்குச் சுத்தமாயையிற் றிருமேனியுண் டென்பது கருத்தாம்.

தணிகைப்புராணத்தில்

"மேதகு சிவமே சத்தியே நாதம் விந்துவே சதாசிவ மகேச, பேதமே யரனென் றிவர்க்கும்விஞ் ஞான கலரோடு பிரளயா கலர்க்குந், தீதறு சரியை கிரியையோ கத்திற் செறிந்தவர் தமக்குநற் றனுக்க, ளோதுறு கரண புவனபோ கமுமைங் கலையுமற் றுயிர்ப்பது சுத்தம்.''

எனக் கூறியிருப்பதால் ஆசிரியர் கச்சியப்ப முனிவருக்கும் இறைவனுக்குச் சுத்தமாயையிற் றிருமேனி யுண்டென்பது கருத்தாம்.

இவையெல்லாம் பூர்வபக்ஷிபாரவர்க ளறிந்திருந்தும், என்னு லறிவிக்கப்பட்டிருந்தும் தாங்களெழுதிய மறுப்பில் இக்கருத்துக்களி லொன்றையேனு மெடுத்துச் சமாதானங் கூறாமல்விட்டதற்குக் காரணம் சமாதானங்கூற முடியாமை யேயன்றி மற்றென்னென்று சொல்லுவாம்? அங்ஙனங் கூற முடியாத பூர்வபக்ஷியாரவர்கள் என் கொள்கையை மாயா வாதக் கொள்கையென்றெழுதியது வியப்பினும் வியப்பே! மாயாவாதமென்னுஞ் சொல்லைப் பரம்பரையில் கேட்டுவந்த பழக்கத்தின்பேரில் பூர்வபக்ஷியாரவர்கள் எழுதினதேய ன்றி சொற்பொருள்தெரிந்து எழுதினார்களில்லை யென்பதை உண்மை யறிவுடையார் யாவருமறிவர். ஆயினும், மாயா வாதம்—அழியாத வாதம் என்னும் பொருளுற இவர்வள் வாக்கே மெய்கூறியதாகக் கொள்ளலும் தக்கதேயாம்.

## ௬௰ தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு.

சுத்த மாயையிற் றிருமேனி கொள்வதைப்பற்றி இது வரை வாத நிகழாமையா லதற்குப் பிரமாணங் காட்டாமல் ஏனைய தத்துவங்கள் வேண்டப்படுவதற் கின்றியமையாமை விளக்கப் புகுந்ததுபோலிதற்கும் காரணகாரிய இலக்கணம் ஒன்றே தசகாரிய விளக்கத்தில் காட்டினும். அங்ஙனமாக வும் நூலாசிரியர் உரை ஆசிரியர் அபிப்பிராயங்கட்கு மாறாக யானெழுதியதாகவு மினியேனுமித்தகைய அபவாதத்தைக் கைவிடும்படிக்குஞ் சித்தாந்த நூல்நெறியையே பின்பற்றிச் சென்றிடும்படிக்கும் பூர்வபக்ஷியாரவர்க ளறிவுறுத்துகின்றார்கள். பிறரை வஞ்சித்து தங்களுக்குயர்ந்த பட்டஞ் சூட்ட வெண்ணியோ அல்லது எனக்குச்சிறுமை வந்துவிடவேண்டு மென்றெண்ணியோ இத்தகைய அறிவுறுத்துதலை அவசரமாக எழுதினார்கள் போலும்.

ஆயினுஞ் சித்தாந்த நூல்நெறியையே பின்பற்றிச் செல்லவேண்டுமென்ற அவர்கள் வாக்கு, அவர்களுக்குச் சித்தாந்தநெறியி லன்பிருத்தல் போலக் காட்டுகின்றமையால் அதுபற்றிப் பெரிது மகிழ்கின்றேன். "பொய்ப்பத்திமெய்ப் பத்தியாகவும் பெற்றோம்" என்றவாறு இவர்கள் பொய்யன்பே மெய்யன்பாகும்படி திருவருளைச் சிந்திக்கிறேன். அன்றியும் நூலாசிரியர், உரையாசிரியர்கட்குத் தோன்றாத நுட்ப அறிவு என்க்குத் தோன்றியதெனக் கொண்டது போல் பரிகசித்திருக்கிறார்கள். தற்காலத்தில் பூர்வாசிரியர்

களை நிந்தனைபுரிவதே தங்களை ஆசிரியரென மதிப்பதற்குச் சிறந்த ஏதுவெனக் கொண்டொழுகும் பெரியோர்களில் நமது பூர்வபக்ஷியாரவர்களும் ஒருவர். இதனை அவர்களியற்றிய வேளாண்மர புண்மை விளக்கத்தில் பார்க்கக்காணலாம். அவர்களிடத்துள்ள அதனை என்னிடத்துமுள்ளதாகக் கூறியது வியப்பன்று.

இறைவன் றிருமேனி கொள்வதைப்பற்றி சங்கை உத்தரங்கிடையாதென்பதை
*"பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லா
னந்தமு மாதி யில்லா னளப்பில ஞத லாலே
யெந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே."
எனவும் †"எந்தையாரவ ரெவ்வகையார்கொலோ" எனவும் அருளிச்செய்த திருவாக்குக்களினிது வலியுறுத்தும்.

சிவசத்தியே முதற்காரணமாய் ரோலாங்கட்டியாவது போல்வதோர் வடிவம் இறைவனுக்குண்டென்று பூர்வபக்ஷியாரவர்கள் ஒரு பிரமாணமுங் காட்டாது எழுதியிருக்கின்றார்கள். இதுதான் சைவசித்தாந்தம் போலும். "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய நூலின்றிக் கோட்டிகொளல்"

---

* சிவஞானசித்தியார் சூ-ம். க. செ. சம்ச.

† திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம்.

எனவும், "கல்லாதானொட்பங் கழியநன் றாயினுங் கொள்ளா ரறிவுடையார்" எனவும் அருளிய தெய்வப் புலவர் திருவாக்குகளை இனியேனும் பூர்வபக்ஷியாரவர்கள் கடைப்பிடித்து நூல் வழியிற் செல்வார்களாக.

*"உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங், கருமமு மருளரன்றன் கரசரணாதி சாங்கஞ், தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி, யருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே"

என்ற திருப்பாசுரம் அநாதி முத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தனுவுண்டாகவே தனுவிற்குறிய தொழில் கரணம், புவனம், போகங்களுமுளவாமாகலின் அவைபற்றி நம்மனோர் போல சுட்டியுணரப்பட்டு வாக்கு மனாதீக னென்றல் வழுவாம்போலுமென்னு மாசங்கையை நீக்குதற் கெழுந்து நம்மனோர் போல, விருப்பு வெறுப்புக்காரணமாக அசுத்த மாயையிற் பெற்ற உருவன்றி உயிர்களின் பொருட்டு அருளே வடிவமாகலின் வாக்கு மனாதீக னென்றல் பொருந்துமென வலியுறுத்தியவாறும்.

அருளே வடிவ மென்பதற்கு நீராலாங் கட்டியாவது போலருளே உருவாய்த்திரண்டது என்று பூர்வபக்ஷியாரவர்கள் பொருள் கொள்ளுகிறார்கள். "அருளுரு உயிருக் கென்றே (தனக்கொன் றின்றி) யாக்கின னசிந்தனன்றே",

* சிவஞானசித்தியார் சு-ம். க. செ. ௩௰௭.

என்றத னுண்மையை உற்று நோக்கின் பூர்வபக்ஷியாரவர்கள் கொண்ட பொருள் பொருந்தாதென்பது இனிது விளங்கும். என்னை? அசிந்தன் என்பதற்கு "வடிவமெல்லாம் உயிர்களின் பொருட்டன்றிச் சிறிதும் தன்பொருட்டுக்கொள்ளுவோனன்மையால்" என ஏதுக்காட்டியிருத்தலினென்க. அவ்வாறு உயிர்களின் பொருட்டுக் கொள்வதற்குத்தான் ஏதுவென்னை யென வினவுவார்க்கு அருளே யென்பது தோன்ற அருளுரு என்றார். இதனை ○ "வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமையானு, நிறுத்திட நினைந்த மேனி நின்மல னருளி னாலே" என்ற திருவாக்கும், இத்திருவாக்கில் அருளினாலே" யென்பதற்கு "மலம் நீங்கியவறிவிலே தங்கி நின்றுணர்த்தும் அருளுடையனாய் நிற்றலின்" என்று ஆசியர் சிவஞான யோகிகள் கூறிய உரையும் வலியுறுத்தும். விருப்பு வெறுப்புடையார்க்கு தானே நினைந்த தொருமேனி எடுத்தல் கூடாதென்பதும் இப்பாசுரத்தால் கவனிக்கற்பாலது.

ஆகவே உயிர்கட்கு விருப்பு வெறுப்புக் காரணமாயுடல் வருதல்போல இறைவனுக்கு வராதென்றும், அருள் காரணமாக வருமென்றும், இவ்வளவே யன்றி அருளுருவென்பதற்கு அருளே திரண்டுருவாயிற்றென்று பொருள் கோடல் பொருந்தாதென்றும் நன்கு விளங்கும்.

---

○ சிவஞானசித்தியார் சூ-ம். க. செ. ௬௰௫.

௩-அ தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு.

*"அவ்வேட மெல்லா மருள்புரி தொழிலென் றோரார்" என்றதிருவாக்கு மிக்கருத்தையே வலியுறுத்துகின்றது. மரபு நூலுடையாரும் சரீரம் திருமேனி வருதலாவது மல ப்பிணியால் ஆன்மாவுக்குச் சரீரம் வந்தது. ஆன்மாவின் மலப்பிணியைத் தீர்க்கும் கருணையால், பதிக்குத்திருமேனி வந்ததென்றறிக என்றார்.

அவ்வாறுண்டாகும் வடிவம் எதிலிருந் துண்டாகு மென்ற சங்கையுத்திரங்கள் ஈண்டுக்கிடையா. உண்டெனக் கொண்டு பூர்வபக்ஷிபாரவர்கள் கூறியபடி அருள் திரண்டுரு வாயிற்றென்றற் கோரியைபு மின்று. அச்சங்கை யுத்தரங் கள் முன்னர்" வித்தை யோடீசர் " என்றற் றொடக்கத்துத் திருவாக்கா லுணர்த்தப்படுகின்றன.

அன்றியும் சுத்தமாயையிற் றிருமேனி யுண்டென்றே ரிடத்திலும், அருள் திரண்டுருவாயிற்றென்று பிறிதோரி டத்தும் முரண்பட ஆசிரியர்க ளருளிச் செய்யமாட்டார்க ளென்பதையும், சொரூப சிவத்திற்குறிய சிற்குணங்களாகிய எண் குணங்களு மொன்றாய் வைத்தெண்ணப்படும் விசுத்த தேகமே (தூயவுடம்பே) அருட்டிருமேனி யென்பதையும் பூர்வபக்ஷிபாரவர்கள் கவனித்திருந்தா லிவ்வாதத்தில் பிர வேசித்திருக்க மாட்டார்கள்,

* சிவஞான சித்தியார் ௬-ம் சு. செ. ௰௧.

பூர்பக்ஷியாரவர்களி னிரண்டாவது வாதத்திற் கிதுகாறுங் கூறியவாற்றால் சிவபெருமானுக்குச் சுத்தமாயையிற் றிருமேனி யுண்டென்பதும், சுத்தமாயைக்குச் சத்தியென்னும் பேருண்டென்பதும், அருள் திருமேனி யென்றது அருள் காரணமாகத் திருமேனிகொண்டதென்பதும் வலியுறுத்தப்பட்டன.

இனி தசகாரிய விளக்கத்திலோர் வினவை யெழுப்பி அதற்கு விடைகூறுறாது விடுத்ததும், வினுவேண்டாது விடைகூறியுள்ளது, மிவைபோன்ற பிறவுமான பல இலக்கண வழுக்க ளாங்காங்குக் காணக்கிடப்பதாயு மிலக்கணவிலக்கிய நூலாராய்ச்சியின்றி சித்தாந்த ஆராய்ச்சிசிறிது செய்துள்ள என்போல்வாரிடத்தும், பூர்வபக்ஷியா ரவர்களாகிய தங்கள் போல்வாரிடத்து மித்தகைய வழுக்கள் மிகக்காணப்படுதல் சகசமென்று, மவற்றைக் கவனித்தல் தகுதியன்றென விடுத்தாமென்றுந் தங்கள் தகுதியை யித்துணைத்தென அளந்து காட்டுகின்றார்கள்.

இலக்கண இலக்கிய ஆராய்ச்சியில்லாத பூர்வபக்ஷியாரவர்களுக் கிலக்கணவழு எவ்வாறு தெரிந்தது? "நலந்தெரிந்து கல்லார் பிறர்குற்றங் காண்பரோ" என்றார் பெரியாரும், அன்றியும் ஒரு வழுவையாவது எடுத்துக்காட்டி இது போன்ற பலவழுக்களுள்ளன என்று எழுதாததுதான் தகுதிபோலும்.

அபிப்பிராய பேதத்தை கௌரவமாய் வாதிக்கப் புகாம லிழிமொழிகள் கலந்து வாதிக்கப்புகுந்தது பூர்வபக்ஷியாரவர்களின் காலதோஷமோ! சகவாச தோஷமோ அறியேன்!

ச௦ தசகாரிய விளக்க மறப்புக்கு மறுப்பு.

"நெய்யுண் பூங்குழன் மடவரா ளின்னொடு வாது
செய்யும் பூசலுக் கெதிரலாற் றீயவாய் திறந்து
வையும் பூசலுக் கெதிரலேன் மானம்விற் றுன்போல்
உய்யும் பாவைய ரேயதற் கெதிரென வுரைத்தாள்" என்ற

பரஞ்சோதி முனிவர் திருவாக்கே இச்சமையம் பூர்வபக்ஷி யாரவர்கட்கு யாம் கூறத்தக்க விடையாகும்.

சித்தாந்த நூலாராய்ச்சி சிறிது செய்துள்ள யானெழுதிய நூலுக்கு அங்ஙனமே சிறிது செய்துள்ள பூர்வபக்ஷி யாரவர்கள் மறுப்பெழுதி அறிவுறுத்தப்புகுந்தது குருடனுக்குக் குருடன் வழிகாட்டினாற்போலும். அற்றன்று. உயர்ந்தோரெல்லாந் தம்மைத் தாழ்த்திக்கூறுதல்முறைமை யாதலின் அவ்வாறு கூறினார்களெனின்? அன்று. என்னை? உயர்ந்தோரெல்லாம் பிறர்குற்றங் காண்பரேயன்றி நாடார். "நல்லோர் பிறர்குற்ற நாடார்" என்றார் பெரியாரும். நாடுதல் ஈண்டுப் பழிப்பின்மேற்று. பூர்வபக்ஷியா ரவர்களோ. இழிமொழிகள் பல கூறிப் பழித்துள்ளார்களாதலினென்க

ஆயினும் இவ்வாராய்ச்சியி லென்னைப் புகுத்திய பூர்வபக்ஷியாரவர்களின் சிறிய நன்றியை என்று மறவேன். உண்மை யின்னதெனவுணர்த்துதல் எல்லாம் வல்ல இறைவனுக்கே கூடுமாகலின், இந்நூலே சித்தாந்த சைவச்செல்வர்களின்பொருட்டு அச்சிவபெருமான் திருவடிமலர்கட்கே அர்ப்பணஞ் செய்கின்றேன். திருச்சிற்றம்பலம்.

இங்ஙனம்,

பொ. மு. முத்தயபிள்ளை

9—8—12 தூத்துக்குடி.

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ. | உ௫. | சமத்தில். | சமயத்தில் |
| ௧௯. | ௧௧. | வாக்கியமென் | வாக்கு என் |
| ௧௬. | ௫. | வாக்கியம் | வாக்கு |
| ௨௭. | ௧௪. | மென்னும் | மென்றும்; |